பரிசளிப்பு. திரு. ... பிரமணிய ஐயரவர்கள்

# VIVEKA CHINTAMANI

THE TAMIL MAGAZINE AND HIGH THOUGHT REVIEW

Devoted to the Diffusion of Practical Truth and Knowledge.

With the Principles of Education, Psychology, Soul-Culture, & Ethics. Adapted for Use in Homes & Schools.

God is Love: Knowledge is Power: AUM.
"Live and Learn" — ஓதுவதொழியேல்."
*SATYAMEVAJAYATI.*

VOL. XVII.

January 1909-March 1910.

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

17-ம் புத்தகம்.

1909 ஜனவரி மீ முதல் 1910 வரு மார்ச்சு மீ வரை.

PUBLISHED BY
THE SECRETARY DIFFUSION OF KNOWLEDGE AGENCY.
Lalitalaya, Mylapore, Madras, S.
For The Viveka Chintamani Publishing Committee.
1909-1910



(Unbound Vol. Rs. 4

# TABLE OF CONTENTS.

## VOL. XVII. (JAN. 1909—MARCH 1910.)

### No. 1, for JANUARY, 1909.



### 1909ம்-ஞூ. ஜனவரி-மீ, 1-வது சஞ்சிகை.



### No 2. For FEBRUARY, 1909.

# TABLE OF CONTENTS.

1909-ம் ௵ பிப்ரவரி மீ, 2-வது சஞ்சிகை



## No. 3. For MARCH, 1909.



1909-ம்௵-மார்சு மீ- 3-வது-சஞ்சிகை.

## No. 4. For, APRIL, 1909.



### 1909-ம் ௵. ஏப்ரல் ௴ 4 வது சஞ்சிகை



## No 5-6. For MAY & JUNE, 1909.



### 1909-ம் ௵ மே- ஜூன் ௴ 5-6-வது. சஞ்சிகைகள்.

## No. 7-8. For OCTOBER &. NOVEMBER, 1909.



## 1909 ம் ஹு அக்டேபர்-நவம்பர் மீ 7-8 வது சஞ்சிகைகள்

# TABE OF CONTENTS.

## No. 9-10 For DECENBER & JAÑUARY 1909-10



## 1909-10-ம் ளு டிசம்பர்மீ, ஜனவரிமீ 9-10.வது சஞ்சிகைகள்.



## No. 11-12 For FEBRUARY AND MARCH 1910.

# TABLE OF CONTENTS.

1909-ம் ௵ பிப்ரவரி-மாச்சு ௴, 11-12-வது சஞ்சிகைகள்.





"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" But, "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] [God is Love: Knowledge is Power. *Aum.*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**


**புத்தகம் 17.]** **1909-ஆ ஜனவரி மீ** **[சஞ்சிகை 1.**


We now enter on a new era of usefulness and celebrate the same by beginning our New Volume (No. 17 with the beginning of the New Year. We would have liked to be punctual too, but we are so entirely at the mercy of the printers, that we feel ashamed to make any promise in their behalf. We must appeal to our readers again for pardon, for this number ought to have been published on the 20th January but for an unexpected strike in the Press which upset all our previous arrangements. Our Printers having got over their trouble have now promised to make amends for the past by being punctual in the future, and all we can say is: "May God help them in their resolve." We request all our subscribers to remit their subscriptions for the New Volume, with any arrears due for the past Volume.

## 'OUR NEW YEAR"—17th VOLUME.

## "NINE YEARS' GROWTH IN GRACE" OR "ARUDRA DARISANAM 1901-1909."

"Thy Secret is thy Servant till thou Reveal it, and then thou art its Servant."

---

"Words are but blank checks on the Bank of Thought, to be filled with meaning by the past and future earnings of the Intellect."—*J. W. Powel.*

"My dear friend,—The All-powerful and All-loving One is the one and only Lord of both *the knower* and *the known.* He is all-good and hence nothing bad can ever come out of Him. In *Sushupti* and *Samâdhi* He rules over the *knower.* In *Jagrath* and *Svapna* too, He lords over him or her, but Ignorance or His Mâyâ does not allow him or her to know it. But whether he or she knows it or not, He being the One and Absolute Lord in all circumstances, nothing bad or injurious can ever come out of Him.

2. "When the mind is uplifted and the soul is above being conditioned by the body," the *knower* is at that time in his Samadhi condition and hence the *knower's* body, mind and self are directly guided by the Supreme Being, and so no harm can come to the *knower* . . . . . . . . .

3. "The *Bandhas* you have talked of are simply intended to coerce the power of Egotism which is another name for Ignorance or Mâyâ. If these *Bandhas* serve this purpose they are beneficial and helpful, otherwise they are mere gymnastics and almost useless. Every posture of Yôga, the control of breath or Pranâyama, in short, the eight Yôgangas,—Yama, Niyama, Asana, Pranâyama, Pratyâhâra, Dharana, Dhyana and Samâdhi,—are all intended for the annihilation of Egotism, the greatest enemy the knower has to deal with . . ."—*Epistle of Sri Swami Brahmanandaji.*

# "நமது புதுவருஷம்"—17-வது புஸ்தகாரம்பம்.

## * "நவமி விருதம்":—ஆருத்ராதரிசனம் ஒன்பதாமுறை.

## (1901 - 1909).

ஐயன் திருமேனி.

"வானாகி [1] மண்ணாகி [2] வளியாகி [3] ஒளியாகி [4]
ஊனாகி [5] உயிராகி [6] உண்மையுமா [7] யின்மையுமாய்க் [8]
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி [9] நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே."—திருவாசகம்.

ஆத்மநிவேதனம்.

"அன்றேயென்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும்
குன்றேயனையாய்! எனையாட்கொண்டபோதே கொண்டிலையோ?
இன்றோரிடையூறெனக்குண்டோ? எண்டோள் முக்கண்ணெம்மானே!
நன்றேசெய்வாய், பிழைசெய்வாய், நானோ இதற்குநாயகமே!"

அருட்குழவியுற்பவம்–ஆனித்திருமஞ்சனம்.

"இழுக்கென்றிருந்தே னீசன்றன் கோயிலேதமிலேன்
கழுக்குன்றிலே வந்தேவியழைத் தென்குறையோரா
திழுக்காவென்றனை யிழுத்தேகித் திருக்குடந்தையிலே
யழுக்காறழிதிருமஞ்சனீ ராடிப் பழுக்கவைத்தவன் வெருட்டினனே."—ஆனந்தத்தாய்மொழி.

### 1901 ஆருத்ராதரிசனம் 1909.

ஏழையேன் ஆருத்ராதரிசனம் காணக் கொடுத்து வைத்தது 1901-ம் வருஷாரம்பத்தில் தான். அந்த-௵ ஆருத்ராதரிசனத்துக்காகச் சிதம்பரத்துக்குப் போயிருந்தபொழுது ஒரு விசேஷம் நடந்தது. அதற்குமுன் ஆனித்திருமஞ்சனத்தின் பொழுது நடராஜமூர்த்தி ஸமயநெறிபற்றி குருமூர்த்தமாகத் தோன்றி அழுக்காறும்போக்கும் வழிகாட்டித் தான் அன்பே யுருவாய் நிற்கும் அதிசயத்தை அன்புவழிப்பட்டு அன்புருவேயாகி யறிந்துய்கவென்று திருவருள் சாதித்துச் சென்றனர். அவ்வழிபற்றி யுடனே அவ்வன்புருவை யடைய யத்தனித்த பொழுது பாழும் சூனியம் வந்து குறுக்கே தடுக்க, அதைத் தாண்டுவதற்கு வேண்டிய தைரியம் போதாத் தீரஹீனனைத் தயங்கி நிற்கும்படி நேரிட்டது. ஆயினும் உடல் பொருளாவியும் ஒன்றாகத் தத்தஞ்செய்து உள்ளமுருகி நின்ற பக்குவன்நிலைக் கிரங்கி யோகசாதனங்களால் ஹிருதயசுத்தி யெய்தும் பொருட்டு ரேசக, பூரக, கும்பக ரூபமான யோகத்தை ரேசக, பூரகமிரண்டையும் ஓதிக் "கும்பகத்தின் குணமறிந்து பூரணத்தில்நில்" என்று

* "நவமிவிருதமிருக்க நாதா நாலொடைந்துங் கூட்டிக்கொள்வாய்." மண்ணவராம் மனுஷர்க்கொருவருஷம் விண்ணவராம் தேவர்க்கு ஒருநாளாதலால் திருவருட்பிரகாசத்தை யாச்ரயித்து அர்ச்சிராதி மார்க்கத்தில் தேவவிருத மிருப்பார்க்கு நவமிதிதி, அருட்பேரும் ஆருத்ராதரிசனம் கிடைக்கப்பெற்றது முதல் ஒன்பதுமானுட வருஷங்களாமென்பது சொல்லாமலே யமையும்.

1-9.—ஐயனது இந்த 9-திருமேனிகளும், அஷ்டமூர்த்தங்களாயும் அவைகளின் சமஷ்டிரூப அந்தர்யாமியாயுமிருக்கிற ஐயனை, தேவ-மனுஷ்ய, நாத-பிந்து, உடல்-உயிர் (அல்லது தேஹம்-தேஹி), தத்துவம்-மாயை, இவையெல்லாம் கடந்து இவைக்கெல்லாம் காரணபூதயாயிருக்கிற தத்துவன் அல்லது சத்ரூபம் என்கிற 9 விதங்களாக தியானிக்க விளங்கும்.

ஓதினதன்றி "ஆறுமாதம் பொறுத்து ஆருத்ரா தரிசன மளிப்பதாக" உள்ளங்கரைந்துருக உண்மையோதி அபயப் பிரதானமும் கொடுத்து அந்தர்த்தானமாயினர். "உள்ளமுருக வுருகக் கள்ளங்கரையக்கரைய" என்றென்தாய் ஓதினவாக்குப்படி, உள்ளமுருகிக் கள்ளம் கரையவும், அபயவரதமளித்த என்னீசன் திருவருளால் அடுத்த ஆருத்ரா தரிசனத்தன்று "தில்லைவரும் பக்தர்கள் பரிபக்குவர் பலருமுய்யப் பரிவுகூர்ந்து, எல்லையிலாக்கருணை நிறை சிவகாமியம்மை" ஏழையேன் தன்னையும் இனிதழைத்துத் "திரிபுரமெரித்த தேஜோமயானந்தனைத் தாள்கொடுத்தாள்வன்" தரிசனம் கிடைக்கச் செய்த அதிசயத்தைச் சொல்லத்தெரியாது சொல்விழுக்குப்பட்டு நின்றனன். அடுத்தநாள் சித்சபை முன்னிலையில், உயரந்தஸ்துள்ள ஒரு ஆங்கிலேய அதிகாரி ஜில்லாத்தலைவரோடும், தாலூகா தாசில்தாரோடும் நின்றுகொண்டு சிதம்பர ரஹஸியத்தை யுணரவேண்டுமென்று ஒரு நிமிஷமாசைப்பட்டார். தாலூகா தாசில்தார் பிராமணராயிருந்தும் சிதம்பரரகஸியத்தை யறிந்தவரல்லவாதலால் அவருக்குத் தோன்றியதை ஏதோசொல்லி, தீக்ஷிதர்களைக்கொண்டு அவருக்குச் சிதம்பர ரஹசிய தரிசனமளிக்கும்படிக் கேட்டுக்கொண்டார். தீக்ஷிதர்களும் அம்பரம் விளங்கும் ஆகாசத்தை மூடி, கற்பூரத்தை நிறையப் போட்டுக் கொளுத்தி சிதம்பரரகஸியத்தை மூடியிருக்கும் திரையைத்திறந்து தீபாராதனை காட்டினார்கள். கற்பூரப்புகை ஏகமாயெழும்பின தொன்றைத்தான் அதிகாரிகள் பார்த்தார்கள். முகக்கண்ணுக்குப்பார்க்கத்தக்கதாயிருந்ததும் கற்பூரதீபமும்அதிலிருந்துகிளம்பியபுகையுந்தானென்று சொல்லும்படியாயிருந்தது. அச்சமயம் கனகசபேசன் சந்நிதானத்தில் நின்றுகொண்டிருந்த அடியார்சிலர் இந்தக் கூத்தைப்பார்த்துச் சிரித்தார்கள். ஆனால் ஹ்ருதயகமலவாசியான சிதம்பரநாதன் அவர்கள் வகையறியாதுவினவி வகைமோசம்போனதற்காகச்சிரிக்காது, அவர்கள் உள்ளக்கருத்துக்குவந்து அவர் கேட்ட கேள்விக்குச் சரியான விடைபகர்ந்தனுப்பும்படியேவ, அந்த ஆஜ்ஞையைத்தலைமேற் கொண்டு அவன் திருவுள்ளம் தெரிவித்தபடி ஆருத்ராதரிசனத்தின் கருத்தை விளக்கி அவ்வுத்தியோகஸ்தர்களைப்போல் உள்ளக்கருத்துள்ள எல்லாரும் படித்துணரும்படி அவர்களுக்குள் பிரபலமாய் வழங்கிவந்ததோர் *ஆங்கிலேயப்பத்திரிகையில் எழுதும்படி நேரிட்டது. பிறகு மூன்றாவது தரிசனத்தன்று "ஆனந்தமிஷன்" என்னும் "ஸத்யானந்தசபை" ஏற்படுத்தி வருஷப்பிரதிவருஷம் "ஆருத்ராதரிசனம்" நேர்ந்து ஐயன் தரிசனமுண்டாகும் போதெல்லாம் குருவாக்குத் தவறாதபடி அவன்மகிமையை விளக்கிப் பிரத்தியேகமாக ஒரு ஸஞ்சிகை பிரசுரித்து வந்ததுண்டு. பிறகு சொற்பகாலம் அருளையுண்டு மதிமயங்கி கதியடைந்து கனவு நினைவற்றதோர் மௌனநிலையிலிருந்ததுண்டு. பின்னுமிம்முறை எம்பிரான் கருணைகூர்ந்து அவன் தரிசனமளிக்க அதன் விசேஷத்தை வாய்விட்டுச்சொல்ல சாத்தியமில்லையால் ஆதிமத்யாந்த ரஹிதனை அவன் "பாரிலுள்ள பக்தர்கள் பரிபக்குவர் பலருமுய்யப் பரங்கருணை மிகுதியாலே, திரிபுரமெரித்த தேஜோமயானந்தனைத் தாள் கொடுத்தாளும்" அதிசயத்தை அறிவிப்பான் 1901-வருஷத்தில் அவன் தரிசனம் கிடைத்தபொழுதுள்ளத்துண்டானதோர் உவகையையும், பின்னர் உள்ளமுருகியுருகிக் கள்ளங்கரைந்துபோக உள்மனம் தெளிந்தவிடத்து அவன் ஆனந்தக் கூத்தைப்பார்த்ததாலுண்டானதோர் அதிசயத்தையும், பின்னர் இம்முறை ஏழையை வலுவிலழைத்து நிர்வாணதரிசனமளித்து நிரதிசயானந்தத்திரு[illegible] வெ[illegible]றமர்த்தியதோர் விசேஷத்தையும் முறையே சொல்லாது சொல்லித் தெரிவிப்பான், மூர்த்தம், நடம், முத்தி,

* See the "Madras Mail" of January of 1901.

யென்னும் மூன்று தலைப்பின்கீழ், அவனது மூர்த்ததரிசனம், நிருத்ததரிசனம், நிர்வாணதரிசனம் என மூன்றுவித சாக்ஷாத்காரதரிசனத்தையும் ஒருவாறு சுட்டிக்காட்டி அவனது "எல்லையில்லாப்பரங்கருணையை," "எத்தி ஏத்தித்தொழுவோம்யாமே" என்றபடி இந்த மஹாதினமாகிய ஆருத்ராதரிசனத்தன்று அவனை ஏத்தித்தொழுது, 16-வது ஆண்டில் பலவித ஆபத்துக்களும் அரிஷ்டங்களும் நேரப்பெற்றும் அவனருளால் அவற்றைக்கடந்து தன் பதினாறும்வயது இனிது முடியப்பெற்றவிவேகசிந்தாமணியின் பதினேழாம்வயதாரம்பமாம் இப்புது வருஷத்தை யாரம்பிப்போம். வயது பதினேழில் வாலிபம் பூரித்து அதிமதுரமான யௌவனரஸம் ஆத்மானந்தத்தைப்போல் கரைகடந்து உடல் பூரித்து வழியுமென்பரதுபோல் விவேகசிந்தாமணியும் தன் பதினேழாவது வயசில் எல்லாவிதத்திலும் மேன்மைப்பட்டு அதிமதுரமான யௌவனரஸம் பொழிய விளங்குமென்று திருவருளைச் சிந்தித்து நமஸ்கரிக்கிறோம்.



## I. குருமூர்த்தம்—மூர்த்திதரிசனம்.

(1901 - ஆருத்ராதரிசனம்.)

நடேச, நடேசானந்தநடேசா !
அநாதரக்ஷக, ஆபத்பாந்தவ !
இன்னுயிர்த்தோழ, இன்பருள்நாத !
சின்மயானந்த, சிவகாமிநேச !
குருமூர்த்தசுந்தர, குஞ்சிதபாத !
சடைவிரிகோல, சாம்பவிநாத !
அம்பிகைபங்க, அன்பர்க்கன்ப !
என்பேயுருக, அன்பருள்நாத !
அன்பேயளித் தெனையாட்கொள்ளீச !
அபயம், அபயம்! ஆண்டவ அபயம் !
தாண்டவ அபயம்! தனிமுதலபயம் !
தயாநிதி அபயம்! தாயுமே அபயம் !
ஜயஜய அபயம், அபயம் ஜயஜயஓம்.

## II. திருநடம்—நிருத்ததரிசனம்.

"கூத்துக்காட்சி."

நன்றிதுஆட்டம் நன்றிதுகூத்து நன்றுநன்றிது நடனம்
அங்குமிங்கு மெங்குங்கண்டிலே னிதுவொருவதிசயங் காண்மினோ
ஒன்றிநின்றன் றுணர்வழிந்துள் ளொளியானபின்
அங்குமிங்கு மெங்குமிதுவலால் மற்றொரு அதிசயங் காண்கிலேனே.

"எங்கு மது வே."

காண்கிலேனதிசயங்காட்சியும் வேறிலை துன்பமுந் துக்கமு மின்பசுகமீழலாம்
ஆண்பெண்அதுவென அவதரித்தாடுனவெல்லாம் அவன் திருவருட் கூத்தாம்
ஆண்பெண் அனைத்தையும் ஆக்கியழித்துக் காப்பதவன் தொழில்
மாண்பெறுதகையனும் மாயவன்பெருமையை யுணர்ந்து முணர்கிலாருனரே.

## III. முத்தி—நிர்வாணதரிசனம்.

"அருவரு": { "நாதாந்த ரூபமே! வேதாந்தமோனமே! நானெனு
மகந்தை தீர்த்தென் மதியுண்ட மதியான மதிவதன வல்லியே."

"பூரணி புராதநி சுமங்கலை சுதந்தரி - புராந்தகி த்ரியம்பிகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள - புஷ்பமிசை வீற்றிருக்கும்

நாரணி மனாதீத நாயகி குணாதீத - நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே - நானுச்சரிக்க வசமோ!"

"போற்றி போற்றி யவள்பேரன்பு போற்றி
போற்றி யெனையாண்டருட் திருவடிபோற்றி
தேற்றியாற்றித் தேனுறை சுவைபோல் போகமுறையோதிய சேவடிபோற்றி
போற்றியே தானுயோகமுறை நாதமுடி வெய்திய பாதமும்."

(ஆருத்ராதரிசனம்—1909).

"உருவநாசமாய் அருவதரிசனம் கண்டதின் பயன்."

*"சிஷ்டரோது வேதமும் சிறந்த ஆகமங்களும
நட்டகாரணங்களும் நவின்ற மெய்மைநூல்களும்
கட்டிவைத்த போதகங் கதைக்குகந்த பித்தெலாம்
பொட்டதாய் முடிந்ததே பிராணயானறிந்தபின்."

"வேண்டியதைப்பேற வேட்கையைத்துற."

"வேணும்வேணு மென்றுநீர் வீணுழன்று தேடுவீர்
வேணுமென்று தேடினுலு முள்ளதல்ல தில்லையே!
வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின்
வேணுமென்ற வப்பொருள் விரைந்துகாண லாகுமே."

ஓம் ஆனந்த நடேசாயநம:



## THE GREATNESS OF DIVINE GRACE.

## திருவிளையாட்டுச்சிறப்பு.

"கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி,
வம்புபழுத் துடலமாண்டு, இங்ஙன்போகாமே
நம்புமென் சிந்தைநணுகும்வண்ணம் நான் அணுகும்
அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே."—திருவாசகம்.

(ஆவணி மூலம்.)

உற்திக்கமலத் துறையுமவன் சிரங்கொய்தான்
பெந்தமறுத் தாள்வான் பாரினில் வந்தவதரித்தான்
முந்தியவன் தாள்கொடுத்து முழுதுமடிமை கொண்டான்
பிந்தியவனிடர் தீர்ப்பான் பரியாக்கி நரியாக்கிப் பாரில்மிக விந்தைசெய்தான்.

புந்திநதி வைகைவெள்ளம் புலன்பொறியிற் பாயவிட்டு
மந்தமதிபாண்டியனுர் மனச்செறுக்கடக்கவெண்ணி
வந்திபம்மை கூலியாளாய் வந்துவிளையாட்டுக்காட்டி
சந்ததமுமுண்மைதனை யுலகறியச்சாற்றுவித்தான்
விந்தைமிகு சுந்தரனுர் விளையாட்டை யென்சொல்வேன்.

*"The Vedas which the Righteous do learn and the Agamas renowned,
The Arguments by elaborate processes established and other sciences learnt or read
With the accumulated Knowledge of the Past and clever Sophistries good for telling tales—
All these were as Naught the Moment I had direct perception of the Lord."

திருவிண்ணப்பம்.

பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படிபட்ட நீ
மட்டுக்குமிஞ்சி மனங்கல்லாச் சமயனுற்றுல்
† எட்டுக்குமுள்ளே யிருந்தவரை யாட்டுவித்து
அட்டுண்டு வாழ்வார்க் கதியாவர்தாளாயோ!



## GURU BHAKTI, OR THE DISCIPLE'S DEVOTION TO THE TEACHER.

### குருபக்தி.

"அன்னமிட்டோரை என்றும் மறக்கலாகாது," "அன்னதாதா சுகீபவ," என்னும் பழமொழிகளைக் காட்டிலும் அதிகமாய் நன்றிபாராட்டும் மொழிகளுமுளவோ? பசித்தோர்க்கு அன்னமளித்து க்ஷுத்பாதையை நிவர்த்தித்தலினும் பேருபகாரம்யாதொன்றுமில்லை என்னுமுண்மை, நம் நாடெல்லாம் "ஹா, ஹா" என்று தவிக்கும் இன்றைக்குயார்நெஞ்சிலும் பசுமரத்தாணிபோல் பாயுமென்பதற்கையமில்லை.

"இம்மிஅரிசித்துணையானும்வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின்."

"ஆற்றுதார்க்கீவதாம் ஆண்கடன்."

"முற்றுற்றுந்துற்றினை நாளும் அறஞ்செய்து
பிற்றுற்று த்துற்றுவர் சான்றவர்."

என்னும் ஆன்றோர் தொல்லுரையும் ஆங்கே ஈதலைப் போற்றுகின்றன. இப்பிராகிருத உடலின் வாதையை நீக்கி இன்பமளித்தலையே இவ்வுலகின் மானிடர் பரமோபகாரமெனக் கொள்வாராயின், மனத்துயரைநிவர்த்தித்து, சன்மார்க்கமடையச்செய்து, முத்திக்கு வழிகாட்டும் ஞானத்தை அளிக்கும் பரமாசாரியன் கடாக்ஷத்தை என்னென்று புகழநாத்துணியும்! அம்ம! அதன் பெருமையை மனத்தாலனுபவிக்கலாமேயன்றி வாக்கால் வெளியிடலசாத்தியம். எனில், அற்றவர்க் கருமருந்தை யளிக்குமய்யன்பால் ஆன்மகோடிகள், தம்மனத்துள் பொங்கி யெழுந்து, தம்மை விழுங்கிநிற்கும் கிருதஞ்ஞதையை, தம் நடத்தையாலன்றி மற்றெங்ஙனே விளக்கவல்லார்? சற்குருவாதல் இயன்ற பேருதவியை நினைந்து நினைந்து, என்புருகி, தம் திரிகரணத்தாலும் தம்மை அன்னோன் திருவடிக்கு அர்ப்பித்துஅவனால் அங்கீகரிக்கப்பட்ட சிலர் செய்கைகளைக்கொண்டு குருபக்தியின் சொரூபத்தை யறிய முயலலாம்.

வாதவூரில் ஆமாத்தியப்பிராமணர் குலத்திற்பிறந்து, கல்விகேள்விகளாற் புகழ்படைத்து, அவைகளின் பெருமைக்கேற்ப பாண்டியவரசனால் பகுமானித்து அமைச்சர் பதவியும், தென்னவன் பிரமராயன் என்னும் பட்டமுமளிக்கப் பெற்று, அவன் அன்னமுண்டுவளர்ந்த வாதவூரடிகளாகிய மாணிக்கவாசகஸ்வாமிகள், அரசன் பொருட்டுக் குதிரைகள் வாங்கச்செல்லும் மார்க்கத்தில், விதியின் வலியால்தம் பரமாசார்யனாகிய தக்ஷிணாமூர்த்தி சுவரூபியாகிய பரமசிவத்தை குருந்தமரத்தடியில் நால்வர்க்கறமுணர்த்தும் அவஸ்தையில் நேர்பட்டு,

"பார்த்த பார்வையா லிரும்புண்டநீரெனப்பருகுந்
தீர்த்தன் றன்னை யுங்குருமொழிசெய்ததுந்தம்மைப்
போர்த்த பாசமுந் தம்மையுமறந்து மெய்ப்போத
மூர்த்தியாயொன்றுமறிந்திலர் வாதவூர்முனிவர்."

பின்பு அவரால் ஆட்கொள்ளப்பட்டுத் திருப்பெருந்துறை என்னும் மகாக்ஷேத்திரத்தில் ஸ்திரமாய் நின்றுவிட்டார். "இந்தஊனெடுத்தபின்செய்ததீவினையாதொன்றுமில்லை" என்னும் பட்டணத்தார் மொழிக்கேற்ப, ஆசாரிய கடாக்ஷ வீக்ஷண்ணியம் பெற்றபின்னர் அடைந்தபரிசுத்த "ஊனில்" வாழ அனுக்கிரகம்பெற்ற ஆன்மா, ஆசாரிய தயாபானுதயத்தின் முன்னர் அஞ்ஞான இருள் அகல்வதுபோல, அன்னமிட்டு, பிராகிருத பெருமையை எல்லாமருளிய அர

† "எட்டினிலைந்தாகு மிந்திரியங்களும்,
கட்டியமூன்று காரணமுமாயிடும்,
ஒட்டியபாச முணர்வதாகவே,
கட்டியவிழ்த்திடுங் கண்ணுதல்தாணுமே."

சன் பேரனுக்கிரகத்தின் நினைவு ஒக்க இழக்கப்பெற்றது.

அதுமுதல்மாணிக்கவாசக சுவாமிகள்அரசனால் குதிரைகள் வாங்கக்கொடுத்த செல்வ முழுவதையும் பரமேசுவரனுக்கு ஆலயம் முதலிய கட்டுவதில் செலவழித்து காலங்கழித்து வந்தனர். இதனைக் கேள்வியுற்ற அரசன் இவரை இராஜதானிக்குத்திரும்பவரும்படி கட்டளையிட்டான். அப்பொழுது இவர் தம்மாசாரியனாகிய குருந்த நீழலிலமர்ந்த ஈசனைக் குறித்து,

"என்னையகனே பொன்னுடரேறே யேறுகொடியு [யர்த்த
மன்ன தென்ன பெருந்துறையெம்மணியே [வழுதிபொருளெல்லா
மின்னலயத்து நின்னடியாரிடத்துஞ் செலுத்து [நெறியளித்தாய்
பின்னனவனுக்கென்கொண்டு பரிமாச்செலுத்தப் [பெறுமாறே!"

என்று கதற, பரமசிவம் அருள்கூர்ந்து, "அப்பனே ஆவணிமூலத்தின்நாள் நாமேஅரசனுக்குத்தேவையான குதிரைகளைக் கொண்டுவருவோம். நீ மனமழுங்காமல் அரசனிடம் சென்று சொல்லுதி" என்று திருவாய் மொழிந்தருளினன். குறித்தநாள் கூறியவாறு பலதரத்துக்குதிரைகளோடும் அமரர்கோன் மதுரைமாநகரம் புக்கார். அரசனும் அகமகிழ்ந்தான்; மந்திரியார்மாணிக்கவாசகரைப்போற்றினன்; குதிரைகளை நிரைநிரையாகக் கட்டுவித்து நிரம்பிய ஆனந்தத்தோடு அரண்மனை புகுந்தான்.

அனந்தலீலா சாகரனான ஈசன் ஆவணி மூலத்துக் காலையில் காட்டில்திரியும் நரிகளைப் பரிகளாகமாற்றி அவைகளை அரசனுக்குக் கொடுத்துத்திருப்பினர் என்பது அவன் அறியானாய் சந்தோஷித்து இரா உறங்கச்சென்ற அளவில், அவையெல்லாம் தம்மியற்கை உருக்கொண்டு பாதிஇராத்திரியில்ஊளையிட்டு ஓடிக் காட்டில் புக்கன. இச்செய்தி அரசன் செவிமடுத்தலும், வெகு கோபித்து, மாணிக்கவாசகன் தம் மந்திரத்தால் தனக்கு மாயஞ் செய்தான் என்று அவரைச் சிறையிலிட்டு வாதை செய்யத்தலைப்பட்டான். அப்பொழுது அதைப் பொறுது வாதவூரடிகள்,

"நாதவோ! நாதமுடிவிறந்த நாடகஞ்செய்
பாதவோ! பாதகனுமென்னைப்பணிகொண்ட
வேதவோ! வேதமுடிவின் விளைந்ததனிப்
போதவோ! போதநெறிகடந்த பூரணவோ!"

"ஐயவோ! வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ! மெய்யில் வினையேன்றலைவைத்த
கையவோ! செய்யகழற்காலவோ காவனைக்காய்
செய்யவோ! வேதப்பரியேறுஞ் சேவகவோ!"

"அத்தவோ! கல்லாக்கடையேனை யாட்கொண்ட
பித்தவோ! பொய்யுலகை மெய்யாகப்பேதிக்குஞ்
சித்தவோ! சித்தந் தெளிவித்தெனைத்தந்த
முத்தவோ! மோனமயமான மூர்த்தியவோ!"

என்று பரமசிவனை நினைந்து நினைந்து சேதாவையிழந்த சேய்கன்றுபோல மனமுருகினர். தம்மடியான் படுதுயரை அகற்றக்கருதிய பரமசிவனர் பாண்டியற்கு இடையூறு செய்யத்துணிந்து, வையையாற்றில் நீர்பெருக்கச் செய்து, கரையுமுடையும் தருவாயில் கொணர்ந்து விடுத்தார். மதுரைமாநகரமழியாத வண்ணம் ஊரவர் ஒவ்வொருவரும் வெட்டிவேலைசெய்ய வேண்டுமென்று இராஜாக்கினை உண்டாயிற்று. அங்ஙனமே ஒவ்வொருவரும் பணிசெய்யத்துவக்கினர். ஆயின், பிட்டுவாணியம் செய்யும் ஓர் வெருவந்து சென்றவள் தன்னால் இவ்வேலை செய்யத்தள்ளாததால் அருகே நின்ற சிறுவனை அவன் தின்னும் வரையும் பிட்டுக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டு தனக்காக அவனை வேலை செய்ய ஏற்பாடு செய்தாள். அவன் மண்வெட்டிக் கரையில் போடுவதும், பிட்டுத் தின்பதும், மறுபடியும் செய்தவேலையை அழித்தலுமாய் விளையாடிக் கொண்டிருந்ததைக்கண்ட இராஜமானுஷ்யர் இவன் முதுகில் பிரம்பால் ஓர் அடி அடித்தனர். அப்பொழுது அவ்வடியானது,

"பாண்டியன் முதுகிற்பட்டது செழியன் பன்னிய
[ருடம்பினிற்பட்ட
தாண்டகை யமைச்சர்மேனி மேற்பட்ட தரசிளங்
[குமரர்மேற்பட்ட
தீண்டிய கழற்கால் வீரர்மேற்பட்ட திவுளிமேற்பட்
[டது பருமம்
பூண்டவெங்கரிமேற்பட்ட தெவ்வுயிர்க்கும் போதன்
[மேற்பட்டவத் தழும்பு."

எல்லார் மேலும்படவே அரசன் நிகழ்ந்தவை அனைத்தின் கருத்தையும் நன்றாக உணர்ந்து எல்லாம் ஈசன் திருவிளையாடலென்று துணிந்து சோமசுந்தரேசுவரனைத் தொழுது கிடந்து அநுக்கிரகம்பெற்றான். மாணிக்கவாசக சுவாமிகளும் துயரினின்றும் நீங்கினார். இம்மகானுடைய ஆசாரிய பக்தி அழலிலிடு பொன்போல துயர் மேன்மேலதிகரிக்கத் தூய்மைவாய்ந்தெழுந்தது.

ஆசார்யர் ஸ்ரீராமானுஜருடைய பிரதம சிஷ்யரான கூரத்தாழ்வான் என்பவர் பக்தியும் அபாரமானது. ஸ்ரீராமானுஜருடைய காலத்தரசாண்ட சோழன் ஓர் வீரசைவன். எல்லோரும் சைவராகவேண்டும் என்னும் எண்ணம் மேலிட்டவன். குடிகளைத்தொந்திரவு செய்து "சிவாத்பரதரம் நாஸ்தி" என்னும் மதத்தை யனுசரிக்கிறோம் என்று கையெழுத்திடும்படிச்செய்துவந்தான். இவ்வரசனிடம் உத்தியோகத்திலமர்ந்திருந்த நாலூரான் என்பவர் ஒருவரை அரசன் கூவி கையெழுத்திட நெருக்கினான். அப்பொழுதவர் "என்போன்ற பாமரசனங்கள் கையெழுத்திட்டும் இடாதும் ஒன்றே. பகவான் இராமானுஜரைப்போன்ற பெரியோர் கையெழுத்திட்டாலன்றோ அரசன் எண்ணம் நிறைவேறும்" என்று கூறினார். அரசனுக்கும் அதுவே சரியென்றுதோன்றவே, உடனே ஸ்ரீராமானுஜரை இராஜமனுஷ்யரை விடுத்தழைத்து வரும்படிச் செய்தான். இவர்கள் வருங்கால் ஆசாரியர் நீராடிக்கொண்டிருந்தார். இன்னவிஷயத்துக்காக அரசன்சொல்லியனுப்பியிருக்கிறான் என்று ஊகித்தறிந்த பரமமேதாவியான கூரத்தாழ்வான், தம்மாசாரியர் இம்மூர்க்கவரசனிடம் போவாரேல் அவர்க்குத் தீங்குநேரிடும் என்று நன்கறிந்து, அவர் உடுத்துக்களைந்த காவிவஸ்திரம் தான்தரித்து, அவர் திரிதண்டத்தைக்கையில்தாங்கி, தாமே இராமானுஜனென்று புறப்பட்டார். இராஜசமுகத்திலடையவே அரசன் இவரை நோக்கி "சிவாத்பரதரம் நாஸ்தி" என்று கையெழுத்திடஉமக்கு ஆக்ஷேபணையுண்டா?" வென்ன, இவர் "துரோணமஸ்திதத:பரம்" என்று (சிவம்=ஓர் சிறிய அளவு, படி என்பது போன்றது; துரோணம்=ஓர் பெரிய அளவு மரக்கால் என்பது போன்றது.) சிவனிலும் துரோணம் பெரிது என விளையாட்டாய்மறுமொழி பகர, அரசன் அதைச் சகியானாய் இவர்கண்களைப் பிடுங்கிவிடும்படி உத்தரவளித்தனன். ஆஞ்ஞையை உடனே இராஜபடர் நிறைவேற்றினர். தம்மிருகண்களை மனவிகல்பமின்றி அரசனுக்கு ஒப்புவித்து தம்மாசாரியனை அவன்கையினின்று தப்புவித்த கூரத்தாழ்வான் பக்தி அசாதாரணமானதன்றோ!

இராமானுஜருடைய மற்றையோர்சிஷ்யராகிய நம்பிதிருவழுதிவளநாடு தாஸர்என்பவர் திருநாட்டுக்கெழுந்தருளுகிற சமயத்தில் இவர்பக்கல் நின்றிருந்தவரொருவர் இவர் இறக்கிறாரே என்று மனநொந்து அழுவதாகக் கண்டு "அட! கெடுவாய்! செத்துப் போகிற நான் போகாநின்றேன். ஸ்ரீபராசரபட்டர் (இராமானுஜரின் சிஷ்யர் கூரத்தாழ்வான்திருக்குமாரர்) வாசிக்கக்கேட்கவிருக்கிறநீ என் அழுகிறாய்!" என்று பட்டர் வைபவத்தில் ஈடுபட்டிருப்பதை வெளியிட்டார்.

எம்பார் என்னும் மற்றோர் சிஷ்யர் இராமானுஜர் அந்திம திசையில் அவரையணுகி "அவர் திருவடிகளை இறுகப்பிடித்து" சுவாமி, சர்வோத்தாரக பந்துவாய் நிற்கிற தேவரீர் திருவடிகளே பிராப்பியமும் பிராபகமும் என்றத்யவசித்திருக்கிறேன். தேவரீர் திருவடி

களை. அகன்று ஒருக்ஷணமும் தரிக்கமாட்டேன். தேஹிவிட்டுப்போனால் தேஹம்நிற்குமோ? "நிழலு மடிதாறுமானோம்" என்கிறபடியே ஸ்ரீபாதச்சர்யாபந்நனை அடியேன் எங்ஙனே தரிப்பேன்?" என்று திருவடிகளிலே போரஆர்த்தியோடேவிழுந்து எழுந்திராமல் கிடக்க, உடையவரும் எம்பாரை நோக்கி "பதறாதே கொள்ளு"மென்று எம்பாரை வாரி யெடுத்தணைத்துக்கொண்டு, தம் பொன்னங்கழல் தாமரைகளை அவர் திருமுடிமேல் வைத்தருளி திருநாட்டுக் கெழுந்தருளினார். மறுதினம் எம்பாரும் ஆசாரிய விச்வேஷம் பொறாராய் திருநாட்டுக் கெழுந்தருளினார்.

சன்னிபாக்ய வேதாந்திகளென்னும் நஞ்சீயர் கிரகஸ்தராகிய தம்மாசாரியர் பட்டர் சிவிகையைத் தாங்கிச் செல்கையில் பட்டரும் "உம்முடைய வேஷத்துக்கு இது விருத்தங்காணும்" என்றருளிச்செய்ய, ஜீயரும் "அங்குத்தை யடிமைக்கு ஏகாந்தமென்று இவ்வேஷத்தைப் பரிக்கிரகம் பண்ணினேன்; அதுதானே அதற்கு விரோதமாகில் பழைய வெள்ளையை யுடுக்கிறேன்" என்று விண்ணப்பஞ்செய்தார். அதாவது ஆசார்ய கைங்கரியத்துக்கு அநுரூபமாகாத வர்ணாச்ரமதர்மமும் பரித்யாஜ்யமென்றபடி.

பின்பொருகால் பட்டர் சேதுஸ்நாநம் செய்ய வெழுந்தருளுகையில், பகலெல்லாம் வழி நடந்தருளின ஆபாஸத்தால், நஞ்சீயர் மடியிலே திருமுடியை வைத்துக் கண்வளர்ந்தருள, ஓரிரவெல்லாம் துடைமாறாமல், அசைதல் செய்யாதேயிருந்தருளினார். ஆகையாலே, ஆசார்ய விஷயத்திலே சைதந்பமற்று படுக்கையாயடிமைசெய்கை சிஷ்ய ஸ்வரூபசித்தி யென்கிறது.

இராமானுஜர் ஒருநாள் தமது சிஷ்ய கோஷ்டிக்குத் திருவாய்மொழிக்கு வியாக்கியானம் சாதித்திருக்கச்செய்தே, "சிந்துபூ மகிழுந் திருவேங்கடம்" என்று வந்தவிடத்து நிறுத்தி, 'நம்திருவேங்கட நாதனுக்கு புஷ்பத்தொண்டு செய்வாராரார்?' என்று வினவ, குளிர், காய்ச்சல் முதலியவைகட்கு பயந்து ஒருவரும் துணியாது சும்மாவிருக்க, அனந்தாழ்வான் என்பவர் அந்த நியமனத்தைத் தமக்கு இடவேண்டுமென்று வருந்திக்கேட்க, உடையவரும் அவர் தைரியத்தை வியந்து, ஆண்பிள்ளை யென்னும் பட்டத்தோடு அவரை அனந்தாண்பிள்ளை என்று விளித்து அங்ஙனமேயாகுக வென்று நியமித்தார். அதுமுதல் அனந்தாழ்வாரும், அவர் சம்சாரமும் திருமலையில் குடியிருந்து, நந்தவனமொன்று அமைத்து, புஷ்பத்தொண்டு செய்து வர, அவ்விடத்திலே நந்தவனத்துக்கு வேண்டுகுளமொன்று தோண்டக்கருதி, மண்வெட்டுதல் தானும், அதைச் சுமந்து தூர இடுதல் தன் பூர்ண கர்ப்பிணியான மனைவியுமாகச் செய்து வருகையில் திருவேங்கடநாதன், அந்தஅம்மையின் கஷ்டம்பொறுக்கானாய், ஒரு சிறுவனுருக்கொண்டு வந்து அவர் ஏந்திச் செல்லும் கூடையை வாங்கி மண்ணையிட்டு அவர் கஷ்டத்தை நிவர்த்தித்தான். அம்மையாரிடம் இளைப்புக் காணார், அனந்தாழ்வார் அதற்குக் காரணமென்னென்று வினவ, ஒருசிறுபிள்ளை சகாயஞ்செய்தானென்ன, ஆழ்வான் கோபித்து, அவன் நின்றுழிச் சென்று, "எனது ஆசாரியன் கைங்கரியத்தை நானே செய்து தலைக்கட்ட விருந்ததை தடை செய்ய வந்தனையோ?" என்று துரத்திச் சென்று அவன் தலையில் தம் கையிலிருந்த மண்வெட்டியால் போட, சிறுவன் ஓடி வேங்கடமுடையான் கோயிலில் புக்கொளித்தான். ஆழ்வானும் கோயிலேறச் சென்று காண்கையில் பையனைக்காணார், பெருமாளின் திவ்ய விக்கிரகத்தின் சிரசிலிருந்து உதிரம் வடியக்கண்டு பகவத் அபராதம் கிடைத்ததே என்று திக்கித்தார். அவ்வாறு பகவதபராதம் கிடைக்கினும், ஆசாரியாஞ்ஞையைக் கைதளரவிடக்

கூடாதென்னும் பக்தியின் பெருமையே பெருமை!

இவ்வனம் நூற்றுக்கணக்காய் திருஷ்டாந்தம் காண்பிக்கலாம். மேற்கூறியவைகளே ஆசாரியாபிமானம், ஆசாரியபக்தி முதலியவைகளை விளக்கப் போதுமானவை.

தி. அ. கோபிநாதராவ்.



## SHAKESPEARE'S HAMLET AND ITS ADAPTATIONS.

## ஷேக்ஸ்பியர் இயற்றியஹாம்லெட் நாடகமும் அதன் வழிநூல்களும்.

I "ஹேம சந்திரசிங் என்னும் ஆத்மவிசாரி."

II "அமலாதித்யன்"

ஷேக்ஸ்பியர் நாடககவி இயற்றியநாடகங்களெல்லாவற்றிலும் "ஹாம்லெட்" என்பது மிகவும் விசேஷமானது. ஏனெனில் அது லௌகிகம் வைதீகம் என்கிற இரண்டும் கடந்து பிரகிருதி ஸ்வபாவமான தத்துவங்களை விளக்கும் நாடகமாயிருக்கிறது. பாரமார்த்திகம் பரத்தையறிந்தார்க்குப் பிரத்தியக்ஷமாய் விளங்குவதாயினும், இகலோகவாஞ்சை நிறைந்த வஞ்சகநெஞ்சினர்க்கு அது எளிதில் விளங்குவதாயின்றி அதன் செய்கையும் தர்மமும் மிகவும் கூடமாய் இருக்கும். ஆகையினால்தான் அதற்குப் "பரமரகஸ்யம்" என்று பேர்வந்தது. மனோதத்துவங்களை முற்றுமறிந்த ஆத்ம விசாரிகளன்றி மற்றவர்கள் அந்நாடகத்தின் உட்கருத்தையுணர்ந்தறிவது மஹாகஷ்டம். ஆகையால்இந்நாடகத்தைப்படிப்பவரெல்லாரும் பாஷாஞானமட்டும் உள்ளவர்களாக விருந்தால் போதாது. பாஷாஞானத்துக்குக்காரணமான தத்துவஞானமுமிருக்கவேண்டும். தத்துவஞானமென்றால் தத்துவங்களின் பேர்விவரங்களைப் பொட்டைப்பாடம் செய்திருப்பதாகாது. நாமத்துக்குள் ஒரு ஜோதியும், அந்தஜோதிவெளிக்குள் மனமும் இருக்கிறதென்று சுருதி முறையிடுகின்றது. ஜோதி வெளிக்குள்ளிருக்கும் அந்தமனமே 'த்ரிஜகத் சிருஷ்டிஸ்திதிவ்யஸனகர்மகிருத்'' - ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமென த்ரிவிதமாத் தோன்றும் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கின்றது. அந்தமனமும் லயமானால் அதுவே பரமபதமான விஷ்ணுஸ்வரூபம். அந்த விஷ்ணுஸ்வரூபத்தை யெவனறிந்தானோ, இவன் ஸ்வானுபத்தாலறிந்து அந்த விஷ்ணுமயமாகவே நின்றானோ, அவன் "ஸர்வம்விஷ்ணுமயம் ஜகத்" என்று இந்த மாயாப்பிரபஞ்சத்தையெல்லாம்விஷ்ணுமயமாக அறிகிறான். மற்றவர்களெல்லாம் அதனுண்மையுணரமாட்டாது மாயாவசப்பட்டு மயங்குகிறவர்களாயிருக்கிறார்கள். இப்படியாக "பூதமுதலாகவே நாதபரியந்தமும்" உள்ள தத்துவங்களையெல்லாம் தரிசித்து அவையெல்லாம் தோற்றமாத்திரமென்றுணர்ந்து அவற்றிற்குமப்பாலான நாதபிந்துதரிசனம் செய்து, நாதஸ்வரூபம் இன்னதென்றும் பிந்துஸ்வரூபமின்னதென்றும் சாக்ஷாத்கார தரிசனத்தால் உணர்ந்தவர்கள் இந்தப்பிரபஞ்ச நாடகத்தைப் பார்த்தனுபவிக்க வல்லவர்களாகிறார்கள். மற்றவர்களெல்லாம் காலசக்ரத்திலகப்பட் டுழல்கிறவர்களாகிறார்கள். இந்தப்பிரபஞ்ச நாடகத்தையே ஒரு நாடகமாக இயற்றியது போலுமுள்ளது இந்த "ஹாம்லெட்" நாடகம்.

"ஹாம்லெட்" என்னும் கதாநாயகன் டென்மார்க் தேசத்தரசன்மகன். இவனுடைய தகப்பனாகிய அரசன், பெண்ணாசையினால் கண்பஞ்சடைந்திருக்க, அவனைக் கடிமணம் செய்த இவன்தாயாம் அரசி, நயவஞ்சகமாய் அவனை ஏமாற்றி, அவன் சகோதரன்மீது கொண்ட சோர நேசத்தால், தன் கணவனை அவன் செய்த சதிபாதகத்துக்காளாக்கி, இரகஸ்யமாய் அவனைமேலுலகம் போகச்செய்துவிட்டுத் தன்சோரநாயகனாகிய அவ்வரசன்

சகோதரனை மணம் புரிந்துகொண்டாள். அரசனும் அரசியும் உத்யானவனத்தில் காதல் மிகுந்து கூடியிருக்கையில், அரசியின் சதியோஜனையால் கண்ணயர்ந்து தூங்கும் அரசன்காதில், ஆலகாலம்போன்ற கடுவிஷத்தை யூற்றி யவன் பாம்பு கடித்திறந்தா னெனச் சொல்லி ஊராரை ஏமாற்றிவிட்டு, சோரனும் அரசியும் உடனே மணம்புரிந்துகொண்டு பட்டங்கட்டிக்கொண்டு அரசாண்டு வந்தனர். இறந்துபோன அரசன்மகன் "ஹாம்லெட்" என்பவனுக்கு வயது பதினெட்டிருக்கும். "கொலையும் வியபசாரமும் எப்படியும் வெளியாவது நிச்சயம்" என்பதுஉண்மையல்லவா. இப்படி அதிரகஸ்யமாகவும் மிகுசாமர்த்தியமாகவுஞ் செய்யப்பட்டகொலையானது வெளியாக வழியென்ன? அது வெளியானவிதம் எப்படி? அநியாயமாக, தான் உயிர்த்துணையெனக்கைப்பிடித்த மனைவியினாலேயே காட்டிக்கொடுத்துக்கொல்லப்பட்ட அரசன் தன்னைச் சதிமோசம் செய்து கொன்ற பாதகனைப் பிரமஹத்திபோல் சூழ்ந்து கொண்டு பழிக்குப் பழிவாங்கின வகையென்ன? இவற்றையெல்லாம் விவரித்து விளக்குவதே இந்தநாடகத்தின் உட்பொருள்.

முதலாவது, "தேகமே நான்", தேஹமழிந்தால் ஆள்அழிந்தான் என்று நினைக்கும் மூடர்களுக்கு இது ஒரு நீதி புகட்டும் கதையாக விருக்கிறது. "ஹாம்லெட்" இளவரசின் தாயும், அவள் சோரநாயகனாயிருந்து, கொண்டபுருஷனைக்காட்டிக்கொடுத்து அவனுயிர் வாங்கினபின் அவளுக்குக் கணவனாயும் டென்மார்க் தேசத்துக் கரசனாயும் வந்தமைந்த அவன் சிற்றப்பனும் "லோகாயதர்" என்று நாம் சொல்லும் இந்த ஹீனமதத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தேஹோஹ பாவனை முதிர்ந்தவர்களாதலால், தேஹம் போனால் ஒன்றுமில்லையென்றுநினைக்கிறவர்கள். தேஹம்போனபின்னும் ஜீவன் சூக்ஷ்ம தேஹவாஸியாகவஞ்சிநின்றுதன் அபீஷ்டத்தைமுடித்துக் கொள்ளுந்தன்மை வாய்ந்ததென்பதையிவர்கள் உணரார். உணர்ந்திருந்தால் அப்படிச் சதிமோசம் செய்யத்துணிந்திரார்கள். அறியாமையின் கொடுமை யாரைவிட்டது! இவர்கள் தம் மனோரதம் நிறைவேறிற்றென்றிருக்கையிலேயே, இவர்களறியாமல் இவர்கள் சூதை வெளிவிடுவதற்கான வழியேற்பட்டு நடந்துவருகிறது. இறந்துபோன அரசன் தன் சூக்ஷ்மசரீரத்தோடு தன்மகனைப் பார்க்க முயற்சிக்க அது பல பிரயத்னங்களுக்குப்பின் பலிக்கி[illegible]து; அவனைக்கண்டுபேசி, உண்மைகளை அவனுக்குரைத்து, தன்னைக்கொன்றபாதகனான அவன் சிற்றப்பன் மீது பழிவாங்கவேண்டுமென்று தூண்டுகிறது. "ஹாமலெட்" இளவரசனும் அப்படியேயென்று அதற்கிசைந்து சத்தியம் செய்து கொடுத்து, அவனுடைய பிதுர்க்கடனைத்தீர்க்கக் கங்கணங்கட்டி அதுமுதல் தன் பிதாவைக்கொன்றபாவியின் மோசத்தை வெளியிட்டு அவன்மீது பழிக்குப்பழிவாங்கவேண்டுமென்கிற ஒரு எண்ணமன்றி வேறொன்றும் சிந்தியானாகி, உலகில்யாருமறியாது இரகசியமாக நடந்தகாரியத்தின் உண்மையை உள்ளபடி அறிந்து, துணிந்து ஆற்றலியற்ற வேண்டுமென்று அதுவே சிந்தனையாய் வேறொன்றும் சிந்திக்காதவனாயிருந்தான். மனது இப்படி ஏகாக்ரப்பட்டுப்போகவும், அவன் அதையே சிந்தித்து அதனுண்மையையே பலவாற்றாலும் தேர்ந்துதெளிவான் கூடமாய்ப் பேசிவந்தான். திருடனைத் தேள்கொட்டினால் வெளியில்சொல்ல வாய்க்காதுபோல், குற்றஞ் செய்தவர்கள் தாங்கள் இரகசியமாகச் செய்த கொடுஞ்செயல் வெளியாகாது மறைத்து வைப்பான் உள்ளத்தையுள்ளபடி சொல்லாமலும், விஷயத்தை உண்மையாய் கிரகிக்காமலும், வேஷம் போட வேண்டியதாயிருந்தது. கள்ளனைப் பிடிக்கக் கள்ளனே வேண்டுமென, இவர்கள் வேஷத்தைக்கண்டுபிடித்து வெளியிட 'ஹாம்லெட்' இளவரசனும் வேஷம்போட ஆரம்பித்தான். ஆனால் அவன்

போட்டவேஷம் பொய்வேஷமின்றி நிஜவேஷமாகவிருந்தது. மனதின் பெருமையும் மாயையின் சக்தியும் இதில்தான் இருக்கிறது. மனதும் மாயையும் தன்னையறிந்தார்க்குத் தாழ்ந்து பணிந்து அவர்கள் இட்ட வேலையைச் செய்யும். அறியாதாரை மயக்கும். கைதூக்கிவிடுவது போல் தூக்கிவிட்டு திடீரென்று கீழேபோட்டு வேடிக்கைபார்க்கும்.

"மாயை யென்பது மருளும் தெருளும்
தெளிந்தார்க்கிலதாம் தெளியார்க்குளதாம்."

ஆகையால் தான மாயைமயச்கம்பொல்லாதது என்று சொல்வது.

"மனமாயை மாயை யிம்மாயை மயக்க
மனமாயைதான் மாயுமற்றொன்றுமில்லை
பின்மாய்வதில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந்திருப்பது தத்துவந்தானே."

—திருமந்திரம்.

மனமாயையே மாயை. இது இந்திரஜால மஹேந்திரஜாலங்களெல்லாம் செய்யும். தத்துவ தரிசனம் கண்டாருக்கன்றி மற்றவரிடத்து இல்லாத குரங்குசேஷ்டையெல்லாம் செய்யும். தனையாய்ந்திருந்த தத்துவஞானிக்கோ, இராமருக்கு ஹனுமார் வாய்த்தது போல், உற்றவிடத் துதவியாயிருந் துதவும். ஹாம்லேட் இளவரசனின் தாயும் அவன் சிற்றப்பனும்காமவசப்பட்டவராய்கொடும்பாபமிழைத்துக் கடுநரகுக்காளாயினர். ஹாம்லேட், அவர்கள் செய்த பாபத்தின் பயனையவர்கள் புசிப்பதற்குப் பிரகிருதி வசப்பட்டதோர் கருவியாய் நின்று கர்மவசப்பட்டவனானான். "பசி நோக்கார், கண்துஞ்சார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார், செவ்வியருமையும் பாரார், அவமதிப்பும் கொள்ளார், கருமமே கண்ணாயினர்" என்பதற்கிசைய அவன் தன் தகப்பன் அநியாயமாக விஷமிட்டுக்கொல்லப்பட்டான்என்பதை சூக்ஷ்ம சரீரவாசியாயிருந்த அவனுடைய இறந்து போன தகப்பனால் அறியவும், அதற்காகப் பழிவாங்க வேண்டுமென்கிறஎண்ணம்அவன் மனத்தில் குடிகொண்டது. ஆனால் கொலைக்குக் கொலை செய்தாலும் கொலை. தொலை தானேயென்கிற எண்ணமொன்று அவன் உள்ளத்திலிருந்து எழுந்து "பழிக்குப்பழி பழியையே வளர்க்கு"மென்றுசொல்லி அவனைக் கொலைக்கஞ்சும்படி செய்தது. பழிக்குப்பழி வாங்காவிட்டால், தகப்பனுக்குக் கொடுத்த வாக்குப் பொய்க்கும். பழிக்குப்பழிவாங்கத் துணிந்தால் பழிபாவம் வளர்ந்து மேலிடும்: இந்த தர்மசங்கடத்தில் என்ன செய்கிறது? தர்மசங்கடம் வந்து விட்டால் அப்புறம் என்னசெய்கிறது! குருக்ஷேத்திரமாகிய இந்த தேஹத்தில் சுபவாசனையென்கிறபாண்டவர்களுக்கும் அசுபவாசனையென்கிற துரியோதனாதியர்களுக்கும் சண்டைதொடங்கியபின் என்னசெய்கிறது! உள்ளம் உண்மையில் இரணகளந்தான். ஆனையானைப்பட்ட அர்ச்சுனனே சோகித்து மூர்ச்சித்துப் போனானென்றால், மற்ற ஜீவர்களுக்குக் கேட்பானேன். அர்ச்சுனனுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவான் சாரதியாகவிருந்தும் அவன்தைரியமெல்லாம் ஒருக்ஷணத்தில் சோகத்திபற்றி யெரிந்துபோய்விட்டது. ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா ஒருவரே இச்சமயத்தில் சத்குருவாயிருந்து காப்பாற்றத்தக்கவர். எல்லாவற்றிற்கும் காரணபூதராயிருக்கும் அவரை ஸ்ரீகுருவென்று எவன் தொழுதுசரண் புகுகிறானோ அவனை அவர் இன்னமுதொத்த தம் அருட்சக்தியால் சோகத்தை நீக்கி ஸம்ஸாரமாகிய துன்பக்கடலிலிருந்து கரையேற்றுகிறார். எல்லாவற்றையும் விட்டு அவரே கதியெனச் சரண்புகாமல், எவனொருவன் தன் சுயபுத்தியைக்கொண்டு அஹம்பாவத்தால் தனக்குத் தோன்றினபடி நடக்கத் துணிகிறானோ, அவன் அவருடைய மாயை வசப்பட்டவனாய் தன் ஸ்வாதீனமிழந்து பரவசபட்டு பிரகிருதி மார்க்கத்தில் தன்னை யறியாமலே நடக்கும்படி அவர் மாயையினால் ஏவப்படுகிறான். இந்த அவஸ்தையில் இவன்போடும் வேஷமெல்லாம் இவன் ஸ்வாதீன மிழந்தவனாய் விடுவதால் வேஷம் வேஷமாத்திரமாய்ப்

பொய்யாகவின்றி, மெய்யாகவே மாறிவிடுகிறது. அது எப்படியென்றால், ஒருவன் வேஷம்போட்டுக்கொண்டு கொலை செய்பவன்போல் நடிக்கும்போது, தான் போட்டிருப்பது வேஷம், தன்செய்கை அபிநயமாத்திரமானதென்றுணர்ந்து உணர்ந்தபடியவன் நடக்கும்வரையில் அதுவேஷம்தான். ஆனால் அவன்கொலைசெய்வதாகஅபிநயம்காட்டும்சமயத்தில், தன்னைமறந்து பரவசப்பட்டு உண்மையாகவே கொலைசெய்துவிட்டாலோ, அவன் வேஷம் வேஷமாத்திரமாகவின்றி அதுநிஜமாக ஆய்விடுகிறது. அப்படியே தர்மசங்கடத்தில் அகப்பட்டு சோகத்தினால் தவிக்கும் மனசு, குருகடாக்ஷமில்லாதபோது, தன்னையறியாது கர்மவசப்பட்டு ஆடிக்காற்றிலகப்பட்ட எச்சிற்கலைபோல் இழுத்துக்கொண்டு போகப்படுகிறது. இப்படிக் கர்மவசப்பட்டழியாது கரையேற்றப் பெறுவோர் சத்குருகடாக்ஷம் பெற்றவெகு சிலரே. மற்றவர்களெல்லாம் வீணாகக் கர்மவசப்பட்டு தன்னுயிரென்றும் பிறனுயிரென்றும் பாராது தங்களுள்ளத் துதித்ததோர்மும்மதஎண்ணமாம் கர்மவசப்பட்டு, அக்கர்மத்தை முடிப்பதொன்றேதங்களுக்குஜன்மசாபல்யமாகக்கருதி, அக்கர்ம முடிக்கும் வழியொன்றையேகருதி வேறொன்றையும் கருதாது, தங்களுயிரையும் திரணமாக வெண்ணி, பிறருயிரையும் அப்படியே நினைத்தொழுகுகிறார்கள். அவர்கள் "தேஹோஹம்", "பிராணோஹம்" என்கிற பாவனைகளிரண்டுந் தாண்டினவர்களாய், மனம் மாத்திரமாய் நிற்பதால், இந்திரியங்களெல்லாம் அவருக்குச் சொன்னபடி கேட்கும். ஏனெனில், வராஹோபநிஷத் கூறுகிறபடி மனம் இந்திரியங்களுக் கெல்லாம் ராஜா. புலன் பொறி யிரண்டும் அவர்களுக்கு வெகு நுட்பமாக விருக்கும். நினைத்ததை நினைத்தவாறு காண்பார்கள். பிறர்மனதிலுள்ளதைக் கண்ணாடியில் முகத்தைக் காண்பதுபோல், கசிந்துருகிக் கெட்டிப்பட்ட பளிங்குபோன்ற தீம்மனதில் பிரதிபிம்பக்கக் காண்பார்கள். ஆதலால், அவர்களைக் கபடநாடகத்தால் ஏய்த்துவிடலாமென்று உலகஞானிகள் நினைப்பது சுத்தப்பிசகு. அவர்கள் தேஹோஹ, பிராணோஹ பாவனைகள் கடந்தவர்களாதலால், தேஹவாதனைக்கும், உயிர்வதைக்கும் அவர்கள் அஞ்சார்கள். அவர்களை தேஹவதை, உயிர்வதை செய்கிறவன் அவையெல்லாம் தனக்குத்தானே பலிக்கும்படி சூழ்ச்சிசெய்து கொள்கிறவனாகிறான். ஆதலால் அவர்களை மனோதர்மத்தால் வென்றால் வெல்லலாமே யன்றி மற்றப்படி இகலோகசாதன சூழ்ச்சியினால் வெல்வதுகூடாது. தலைக்குமிஞ்சின ஆக்கினையில்லையால், தான் கருதியகர்மத்தின் பொருட்டு தன் தலையையும் கொடுக்க சித்தமாயிருப்பவர்களையென்னசெய்யக்கூடும்? உயிரைத் திரணமாயெண்ணினவர்களாதலால் உயிர்வதையினால் அவர்களை யென்னசெய்யக் கூடும்? அவர்கள் மாயை வசப்பட்டவர்களாய் மாயாசக்தியினுதவி பெற்றவர்களாயிருப்பதால், லோகமாயையை வெல்லத்தக்கவனே அவர்களை வெல்லக்கூடும். லோகமாயையை வென்றவன் யாரோ அவனே சாக்ஷாத் சத்குரு. அவனே ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா. ஆகையால் மனிதன் மனக்கிளர்ச்சியுண்டாகி மாயைவசப்பட்டானாகில், அவனை ஈசுவரன் தான் ஆளவல்லவன். மற்றப்படி உலகவாசனை படிந்த மனிதர்களால் அவனை ஆளமுடியாது. ஆகையால் இப்படி மனக்கிளர்ச்சியுற்ற காலத்தில் மாயை வசப்பட்டு நடக்கிறதா, அல்லது ஸத்யத்தை வழிபட்டுநடக்கிறதா வென்கிற சந்தேகமுதிக்கும்.

இதுவே தர்மசங்கடம் என்றுரைத்தல். என்னவந்தாலும்சரி, ஸத்தியத்தையேபற்றி நிற்கத்தீர்மானித்தவனுக்கு ஈசுவரன் ஸத்குருவாகத்தோன்றி யவனை யாள்கிறார். ஸத்தியவழிபற்றி நடக்கவஞ்சி, தற்கால சுகசௌக்கிய லாபநஷ்டங்களைக் கருதி நடக்கத்துணிகிறவனை மாயை தன் வசப்படுத்திக் கொண்டு

கர்மவழியில் நடத்தி மனதுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணிக் கடைசியில் கர்மபந்தத்தினின்றும் அவன் நீங்காதபடி அவனைக் கெட்டியாகக் கட்டித் தனக்கடிமைகொள்கிறது. முன்னவன் ஊர்த்துவமுகமாய், நல்லொளிமார்க்கமாய் நமனுலகந்தாண்டிச்செல்கிறான். பின்னவன் களித்திளித்துப் "புகைமார்க்கம்" என்றுசொல்லும் இருட்டுவழியில் சிக்கி அதோமுகமாய் நமன்வாய்ப்பட்டு நரகாதி யனுபவங்களினால் தன்கர்மபலனை யனுபவித்துப் பின்னும் பின்னும் ஜன்மமெடுத்துக் காலசக்கரத்தைத் தாண்ட முடியாமல் தவிக்கிறான். இருவர்க்குமுள்ள வித்தியாசம் இதுவே. இந்த வுண்மைகளை யெல்லாம் "ஹாம்லேட்"நாடகத்தில் பரக்கக்காணலாம். இப்படிப்பட்ட மஹாமேன்மை பொருந்திய இந்நாடகத்தைச் செய்த வரகவியாம் ஷேக்ஸ்பியர், தத்துவபோதம் செய்வதைப் பிரதம நோக்காகக் கொள்ளாமல், பிரபஞ்ச நாடகவியல்பை யுள்ளதுள்ளபடி காட்டவேண்டுமென்னும் மேலான நோக்குக்கொண்டு எழுதி யிருப்பதால், அதில் பிரபஞ்சநாடகவியல்பேநன்று விளங்குவதா யிருக்கிறது. பிரபஞ்ச நாடகக்காட்சியைக் கண்டு களிக்க வல்லார், அகத்திற் கண்கொண்டு பார்த்து ஆனந்திக்கவல்ல தத்துவ ஞானிகளேயன்றி, "முகத்திற் கண்கொண்டு பார்க்கும் மூடர்களாம்" உலகஞானிகளல்லரென் றுமுதலெடுப்பிலே சொல்லியிருக்கிறோம். ஆகையால் இந்நாடகத்தை யறிந்து வாசிக்கத் தத்துவஞானம் இன்றியமையாத தென்றேற்படுகிறது. அப்படியானால், இதனை மூலகிரந்தமாகக் கொண்டு வழிநூல் செய்ய யத்தனிப்போர் எப்படிப்பட்ட யோக்கியதை யுள்ளவர்களாக விருக்கவேண்டுமோ, அதைவாசிப்போர்தாமே தம் விவேகநுட்பத்தால் அறிந்துகொள்க.

இப்படிப்பட்ட இந்த அருமையான நாடகத்தை முதல்நூலாகக்கொண்டு "ஹேமசந்திரவிங்என்னும்ஆத்மவிசாரி"யென்னும்தலைப்பின் கீழ் இந்த விவேகசிந்தாமணியில் 15,16, வது வாலியங்களில் ஸ்ரீராஜநாயகி யென்னும் புனைப்பெயர்பூண்ட நண்பரொருவரால் எழுதப்பட்டு வழிநூல் வெளி வந்திருப்பதை விவேகசிந்தாமணியைவாசிப்போர்மறந்துபோகக்காலம்முந்தவில்லை. இப்பொழுது இந்நாடகத்தைமுதல்நூலாகக்கொண்டு ம-ா-ா-ஸ்ரீ, பி. சம்பந்தம் முதலியார் அவர்கள் "அமலாதித்யன்" என்னும் பேரமைத்து வழிநூல் ஒன்று செய்திருக்கிறார். இரண்டையும் வாசித்துப்பார்த்த ஒருவர் முன்னதே சிலாக்கியமாக விருக்கிறதென்று சொல்லக்கேட்டு, இரண்டையும் நாம் பல விடங்களில் ஒத்துப் பார்க்கலானோம். முன் சொல்லிய நூல் விவேகசிந்தாமணியில் வெளி வந்ததென்கிற அபிமானம் கொண்டு நாம் பேசுவதாகப் பிறர் எண்ண இடங்கொடுக்க இஷ்டமில்லாமையால், இவை யிரண்டையும், வழிநூல் செய்த கிரந்தகர்த்தர்கள் இருவரில் ஒவ்வொருவரும் மற்றவர் இயற்றிய நூலை முற்றும் படித்துப்பார்த்து தத்தம் அபிப்பிராயத்தை இவ் விவேகசிந்தாமணிமூலமாய்த் தெரிவிப்பரேல் உத்தமமாயிருக்குமென்று எண்ணிக்கோருகிறோம். கைப்பொருளில்லாக்குறைவால் 'ஹேமச்சந்திரவிங் என்னும் ஆத்மவிசாரி' தனிப் புஸ்தகமாக வெளியிடப்படாமல் விவேகசிந்தாமணியில் வெளிவந்தபடி நிற்கிறது. "அமலாதித்யன்" இயற்றிய நூலாசிரியர் விலைப்போதற்கென்றே புஸ்தகமெழுதுபவராயின்றி, உண்மையாகவே உள்ளறிவு பூரிக்கப் புஸ்தகமெழுதும் ஸ்வபாவ முள்ளவரென்பது பிரஸித்தமானதுபற்றி இந்த அருமையான ஆங்கிலேய நாடகத்தின் வழிநூல் தமிழில் மிகவும் ஏற்றமானது எதுவெனத் தெளிவது அவருக்கும் ஸம்மதமாயிருக்குமென்று நினைத்து இப்படி வரையலானோம்.

"அமலாதித்யன்" என்னும் கிரந்தத்துக்கு கிரந்தகர்த்தாவின் நண்பரான மிஸ்டர் வி. வி. ஸ்ரீனிவாசஸன் என்பவர் இங்கிலீஷில் ஒரு

முன்னுரையெழுதியிருக்கிறார். அதில் நாம் விசேஷமாய்கவனிக்கத்தக்கது ஒன்றுமில்லை. அவர்தாமேதமக்கு தமிழில் பரிச்சயம் அவ்வளவாகவில்லையென்று சொல்வதோடு ஷேக்ஸ்பியர்நாடகங்களை உள்ளுறவுணர்ந்தாராய்ந்து தேர்ந்தபயிர்ச்சியுமில்லையென்று சொல்வதால், மனோதத்துவங்களையும், மற்றுமுள்ள நுட்பமான மனோராச்சியங்களையும் தமிழில் தெரிவிப்பது சாத்தியமாயில்லை யென்று அவர் தம் முகவுரையில் சொல்லும்வார்த்தைகளை வாஸ்தவமாக வெடுத்துக்கொண்டு நாம் பதிலுரைக்கத் தேவையில்லையாயிருக்கிறது. கமலாம்பாள்சரித்திர மெழுதின மஹான் இப்பேர்ப்பட்ட தமிழறியாத் தலைவர்களான ஆங்கிலேயங்கற்று ஆர்ப்பாடம் செய்யும் மேதாவிகளுக்கு வாய்திறந்துபேச வழியில்லாதபடி அப்புத்தகமெழுதியதொன்றினாலேயே சரியான வாயாப்புக் கொடுத்திருக்க, அதையறியாது பேசுவோர்வார்த்தையை யாரும் பெரிதாகப் பாராட்டத் தேவையில்லையே! ஆகையால் அவர்தமிழறியாது தமிழுக்குரைத்ததோர் இழுக்கை நாம் பெரிதாகக் கொள்ளவில்லை.



THE CONGRESSES AND CONFERENCES OF 1908.

## 1908-ஆம் வருஷத்திய காங்ரெஸ்களும் கான்பரென்ஸ்களும்.

சென்ற டிசெம்பர்மாசம் கடைசி வாரத்தில் இச்சென்னைமாநகரில், பற்பல காங்ரெஸ்களும், கான்பரென்ஸ்களும் கூடின. காங்ரெஸ்கூட்டம் சென்ற 1907-ஆம் டிசெம்பர் மாசம் சூரத்தில் கூடி, 'நாஷனலிஸ்ட்' கக்ஷியாருக்கும், 'மாடரேட்' கக்ஷியாருக்கும் உண்டான அபிப்பிராய பேதத்தால் இருவரும் சண்டைபோட்டுக்கொள்ள காங்ரெஸ்சபை சந்தையிற் கூட்டம்போல் செய்வகையறியாது கலைந்தது. உடனே, இருகக்ஷியைச் சேர்ந்தவர்களும் தனித்தனியே ஒரு கூட்டம் கூடினார்கள். மிதக்கக்ஷியைச் சேர்ந்தவர்கள் "கன்வென்ஷன்" என்று ஒரு சபை கூட்டி காங்ரெஸ்சபை கூடுவதற்கான விதி நிஷேதங்களை யேற்படுத்தஒருகமிட்டி நிமித்தார்கள். இக்கமிட்டியார் அலகபாத்தில்கூடி காங்ரெஸ் கூடுவதற்கென்று சில விதி நிஷேதங்களை யேற்படுத்தினார்கள். அந்த விதிவிலக்குகளின்பலனும், 'நாஷனலிஸ்ட்' கக்ஷியைச்சேர்ந்தவர்களெல்லாம் விலக்கப்பட்டார்கள். விலக்கப்படாது சேர்த்துக்கொள்ளப்பட்டவர்கள் கொடுக்கறுத்ததேள்போல், விஷமத்துக் கேதுவன்னியில் நன்றாக வாய்ப்பூட்டிடப்பெற்றவர்களானார்கள். இதற்கு முன் காங்ரெஸ்ப்ரெஸிடெண்டாயிருந்து பேசவிடம் பெறாது காங்ரெஸ்கூட்டத்தைக் கலைத்துவிட நேரிட்ட கனம் டாக்டர் ராஷ்விஹாரிகோஸ் என்பவர் இந்த விசைகாங்ரெஸ்-ப்ரெஸிடெண்டாகவீற்றிருக்கும் பாக்கியம் பெற்றார். இவர் இந்த விசை தான் சொல்வதற்கு எதிர் சொல்வார் யாருமில்லையென்று, தனது செல்வாக்குக்கிடையூறாகநின்ற எதிர்க்கக்ஷியாரை அவருக்குத் தோன்றியபடி பேசிவிட்டாரென்று பலருக்கும்கோபம். ஆனால் காங்ரெஸ் சபையில் வாய்திறந்தால், வெளியில் தள்ளப்படுவது நிச்சயமாதலால், அப்படிக் கோபமுற்றவர்கள் பத்திரிகைகளுக் கெழுதித்தங்கள் ஆத்திரத்தை ஒருவாறு தீர்த்துக்கொண்டார்கள்.

இந்த காங்ரெஸ் சபையில் இந்தியமந்திரியாகிய லார்ட்மார்லியவர்களும், இராஜப்பிரதிநிதியாகிய லார்ட்மிண்டோ அவர்களும் சேர்ந்து இந்தியதுரைத்தன விஷயத்தில் சிலமுக்கியமான சீர்திருத்தங்கள் செய்யக்கருதி யதற்கான ஏற்பாட்டை இரண்டுவருஷகாலமாகக்கலந்துபேசித் தீர்மானித்து வெளியிட்டிருப்பதைச் சந்தோஷத்தோடேற்றுக் கொண்டதொன்றேமுக்கியமானவிஷயம். மற்றத்தீர்மானங்களெல்லாம் பழம்பாடங்களே. ஆத்மவி

த்தியாபோதசிக்ஷையில், தீவரதரனுக்கு ஒப்பானஉத்தம அதிகாரிகளுக்கு நேரில்ஞானோபதேசமும், இரண்டாந்தரமான தீவரபக்குவமடைந்தவர்களுக்கு யோகமார்க்கமாகப்பாடுபட்டுத்தத்துவதரிசனம்பெற்று, தத்துவமுள்ளவிடத்தில் தத்துவனையறிந்துகொள்கவென்று யோகமார்க்கதீக்ஷையும், கொடுப்பதுண்டு. பரிபக்குவம்முதிராத மந்தபுத்தியுள்ள அதம அதிகாரிகளுக்கு மனோசுத்த முண்டாகும் பொருட்டு மந்திரோபதேசம் செய்து, ஒரு இஷ்டதேவதையைக் கொடுத்து அத்தேவதையின் மூலமந்திரத்தை யுபதேசம்செய்து அதையுருப்போட்டு ஜபித்துவரும்படிச் செய்வதுண்டு. அதிலும் தீவரதர ஆசையுள்ளவன் அம்மந்திரத்தை சதா உருப்போட்டு சீக்கிரத்தில் இஷ்டதேவதையின் ஸாந்நித்தியத்தையடைந்து அந்ததேவதையின் பிரத்தியக்ஷதரிசனத்தால், மேன்மேலும் அவன் கர்மவிசேஷத்துக்குத் தக்கபடி வழிகாட்டப்பெறுவான். மந்ததரனான அதிகாரியோ, உண்டுடுத்துறங்குவதோடு இதையும்ஒருவேலையாகக் கொண்டு காலை மாலையில் குருவுக்குக்கொடுத்த வாக்குத் தப்பாமலிருக்க ஏதோ சாத்தியானுசாரம் மந்திரங்களை உருப்போட்டுக் கொண்டு "நானும் தேவஉபசனை செய்கிறேன்" என்று அகங்கரித்து மீளும் வழியறியாது ஆற்றாது திரிவன். இவனைப்போல் இந்த மிதக்கக்ஷியைச் சேர்ந்த மிதவாதிகள் வருஷத்தில் மூன்று நாள் ஓரிடத்தில் கூடிக் குதூகலமாய் "தீர்மானங்கள்" செய்கிறோமென்று முன்செய்த தீர்மானங்களையே திருப்பித் திருப்பிச் செய்துக்கொண்டு மந்திரம் உருப்போடுவது போல, உருப்போட்டுக் கொண்டிருந்தார்கள். இவர்களில் தீவரதரரான சிலர், மந்திரத்தில் மாங்காய் விழாதென்றுணர்ந்து, திரிகரண சுத்தியாய் உழைத்தாலன்றி இஷ்டபூர்த்தி யாகாதென்பதை யோர்ந்தறிந்து, உண்மையான இராஜ்யாதிகாரத்துக் கிருப்பிடம் குடிகளின் உள்ளமேயன்றி அதிகாரிகளின் பீடமல்லவென்று ஜனங்களை முன்னுக்குக் கொண்டுவரப் பார்த்தார்கள். அனுபவ மில்லாதவர்களாதலால், ஜனங்களில் அடங்காப் பிடாரிகளான அம்சம் தலைதெரியாது கூத்தாடத் துவக்க, அவர்களை யடக்கியாளச் சாமர்த்தியமின்றிச் செல்வாக் கிழந்தவர்களானார்கள். தலைவர்கள் செல்வாக்கிழக்கவும் "தந்தலையாட்டம் தலைக்குமேலே" யென்று ஒவ்வொருவரும் தனக்குத் தோன்றினபடி யுழைக்கத் தலைப்பட்டார்கள். சிலர் அதிகாரிகளை அண்டிப்பிழைக்கக்கருதி அவர்கள் சொன்னதற் கெல்லாம் சரியென்று தலையாட்டிவர, வேறுசிலர் அடங்காப் பிடாரிகளாய் கோபம்தலைக்கேறி துர்க்கிருத்தியங்கள் செய்து அதிகாரிகளை யச்சுறுத்தப்பார்த்தார்கள். இயல்பாகவே அதிகாரிகள் இவர்கள்துர்க்கிருத்தியங்களை யடக்கக் கடுமையான சட்டங்கள் செய்யத் தலைப்பட்டார்கள். குற்றஞ்செய்தவர்செய்யாதவர் எல்லாரும் இதனால் வருந்தநேரிட்டு, பலரைப் பிடித்து விசாரணை யொன்றுமின்றியே தூர தேசங்களில் கொண்டு போய் காவலில் வைக்க நேரிட்டது. குற்றஞ்செய்தவர்களெனத் தோற்றினவர் பலரைப் பிடித்துத் தண்டித்தும், தண்டனைக் குள்ளாகும்படி கோர்ட்டுகள்முன் குற்றஞ்சாட்டியும் வருகையில், இந்தியாவின் நல்லகால வேளையினால், "மிகவும் தாராளமானது" என்று சொல்லத் தக்க சீர்திருத்தங்கள் செய்ய இந்தியர் மந்திரி மனமுவந்தார். இந்தச்சமயத்தில் கக்ஷி வைராக்கியம் சாதிக்காது எல்லாரும் தேசப் பொதுக்ஷேமத்துக் குழைத்தால் நன்றாக விருக்கும். அதைவிட்டு பழம்பெருச்சாளிகளான சில காங்கிரெஸ் தலைவர்கள், மற்றவர் மனம் நோக அவர்களை ஏற்காதவிதமாகப் பேசி, 'தாங்கள் தான் ஏதோ இராஜவிசுவாஸமுள்ளவர்கள் போலும், அவர்களுடைய எண்ணத்துக்கு ஒத்துவராத மற்றவர்களெல்லாம் இராஜத்துரோகிகள் போலும் மனப்பால்குடித்து, அயோக்கியர் சிலர் செய்யும்

அக்கிரமங்களினால் மனம் வெருண்டிருக்கும் அதிகாரிகள் இன்னும் காப்ராப்படும்படிப் பேசிப்பிதற்றுவது மிதவாதிகளிலும் தீர்க்காலோசனை செய்யத் தக்கவர் பெரும்பாலாருக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும் என்னசெய்கிறது! காலக்கொடுமை யென்று சும்மாவிருக்க வேண்டியதாகவிருக்கிறது. இதுநிற்க.

23 வருஷகாலங்களாக மந்திரம் ஜபிப்பதுபோலும், வருஷத்தில் மூன்று நாள் மட்டும் முணுமுணுவென்று ஏதோ சில வார்த்தைகளைமட்டும் வாசாமகோசரமாகப் பேசிவிட்டுப்பின் 360-நாளும் பணம் தேடுவதே பெரிதாகவுழைத்து வந்தவர்களில் ஏதோ சிலர் உண்மையாகவே ஊருக்குழைத்து வந்தார்கள். மிஸ்டர் கோக்கலே, பாபு சுரேந்திரநாத் பானர்ஜி முதலியவர்கள் இத்தகையோராம். ஸர்பிரோஸ்ஷாமேட்டாவும்ஏதோஉழைத்து வந்தார். ஆனால் ஊருக்குழைப்போர்க்கு அகம்பாவம் அதிமாகக் கூடாது. "அகம்பாவத்தால் அழிந்தான் துரியோதனன்" என்பர் நம்மவர். அகங்காரதோஷத்தால், அவர் அதிகாரம் முன்போல் அவ்வளவாகச்செல்லவில்லை. ஆனால் அவர் மனம் கசந்து தான் மிதவாதி யென்கிற அகங்காரந் தலைக்கேறித் தன்னெதிரிகளை உதாசினமாகவும் உண்மைக்கொவ்வாத விதமாகவும் பேசிவிட்டார். இதனால் அவரிடத்தில் எதிர்க்கக்ஷியார் எல்லாருக்கும் அருவருப்பு.

"ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை" யென்பதுபழமொழி. ஜனங்கள் தாமாக நினைத்துத் தம்நிலையறிந்து நடக்கத்தெரியாதபொழுது படித்துப் பணந்தேடினவன் தலைவனென்று முன்னுக்குவரவும், மற்றவர் மௌனமாய் அவன் பெரியதனத்தை ஏற்றுக்கொள்ளவும் பாந்தமாயிருந்தது. ஜனங்கள் தங்களுக்குத்தாமாக நினைத்து தாங்கள் யோகக்ஷேமத்தைப்பற்றித் தங்களே கவலையெடுத்துக்கொள்ளத் தலைப்படும்பொழுது ஜனசிரேஷ்டரென்று முன்வருபவர், ஜனங்களுடைய அபிப்பிராயத்தையறிந்து அதற்கிணங்கிநடந்து அவர்களை நல்வழிக்குக்கொண்டுவரத்தக்க சாமர்த்தியம் வாய்ந்தவராக விருக்கவேண்டும். அந்தசாமர்த்தியம்அகங்கார புருஷர்களுக்கு இயல்பாய் அமைவதுகஷ்டம். அகங்காரத்தைப்போல் அறிவைமழுங்கச்செய்யும் உட்பகைவேறில்லைஆகையால் அகங்கார புருஷர்கள் நாட்டாண்மைபாராட்டக் காலம் ஏற்றதாகவில்லை. அப்படியே சாந்தமும் இன்றியமையாததோர்யோக்கியதையாகவிருக்கவேண்டும். சாந்தமில்லாதோர்ஜனத்தலைவராயிருக்கத்தலைப்பட்டால்அநர்த்தமேவிளையும். அகங்காரமுள்ளவரையில் சாந்தமில்லை. சாந்தமுண்டானால் அகங்காரம் தானேயடங்கிவிடும். ஆகையால் ஸ்வாத்மவுணர்ச்சியுண்டாயிருக்கும் இக்காலத்தில், ஜனத்தலைவராயிருப்பவர் ஸ்வாத்மானுபவச் செல்வராக விருக்கவேண்டும். அதிகாரிகளையண்டிப்பிழைத்து அவர்கள் சொல்வதற்கெல்லாம் சரியென்று தலையசைத்துப் பிரக்கியாதி பெற்றகாலம் முன்னமேயே போய்விட்டது

இராஜாங்க விஷயமாகப் பேசும் காங்ரெஸ் சபையோடு பலதொழில் விர்த்தியை நாடிக்கூடும் இண்டஸ்ட்ரியல்கான்பரென்ஸ் ஒன்றும்கூடிற்று. காங்ரெஸுக்குப்பின் ஆசாரச் சீர்திருத்த மஹாசபை வழக்கம்போல் கூடிற்று. கனம்மிஸ்டர்ஜஸ்டிஸ்சங்கரன்நாயர் அவர்கள் இம்மகாசபைக்கு அக்கிராசனாதிபதியாயிருந்து மிகவும்மேலான பிரசங்கமொன்று செய்தார். இராஜாங்க விஷயமாக கவர்ன்மெண்டாரிடம் சுதந்திரம் கேட்பதும் துரைத்தனகாரியங்களில் குற்றங்கண்டு பேசுவது சுலபமே. ஆனால் ஒரு குடித்தனத்தைக் கட்டிக்கொண்டு சமாளிப்பது தான் கஷ்டம். அதிலும் குடித்தனப் பாங்கறிந்து குடித்தனம் செய்வது மிககஷ்டம். குடித்தனப்பாங்கறிந்து குடித்தனம் செய்வதிலும் இல்லறதர்மம் வழுவாது குடித்தனம் செய்வது

மஹாகஷ்டம். அதிலும் நாலுபிள்ளை குட்டிகளை வைத்துக்கொண்டு அவர்களை நல்வழியில் நடத்தி ஆளாக்கிவிடுவது கஷ்டத்திலும் கஷ்டம். ஆகையால் இந்த ஆசாரச் சீர்திருத்த சபையார் செய்முயற்சி யெல்லாவற்றிலும் மேலானதாயிருக்கிறது. நம்முடைய சமர்த்தெல்லாம் இதிலேதான் விளங்கவேண்டும். பிறரிடத்துத் தோஷம் கண்டுரைத்தல் மிக வெளிது. தன்னிடத்துள்ள தோஷத்தையுணர்த்தல் மிகக்கஷ்டம். உணர்ந்தாலும் அதைத்திருத்தி தனக்குத்தானே நல்வழிக்கு வருவது அதிலும் கஷ்டம். ஆதலால் இந்த ஆசாரச்சீர்திருத்த விஷயத்தில் ஜனங்கள் அவ்வளவு சிரத்தை யெடுத்துக் கொள்வதில்லை. ஆனாலும், இச்சீர்திருத்த விஷயத்தில் உழைக்க கங்கணங்கட்டியுள்ள சிலர்பேருக்கத்தால், இம்மஹாசபை வருஷா வருஷம் நடந்து வருகிறது. இதனால் நன்மையும் சிறிதுண்டு. ஆனால் ஜனங்கள் விவேகம்பெற்று ஆத்மக்ஷேமத்தை நாடினாலன்றி ஆசாரச்சீர்திருத்தங்கள் சரியாககவனிக்கப்படமாட்டா. எல்லாம் ஆத்ம க்ஷேமார்த்தமாகவே யிருத்தலால், ஆத்மவுணர்ச்சி யுண்டானாலன்றி இவ்வழிகளில் ஊக்கம் பிறப்பது கஷ்டம்.

இந்தியாமுழுமையிலுள்ள ஆஸ்திகர் மஹாசபை யொன்றும் கூடிற்று. அதில் மிஸ்ரஸ் ஸரோஜினிநாயுடு என்னும் கவிசிரேஷ்டையான மாது வெகுமதுரமாகவும் உண்மையாகவும் பேசினாள். 'வருஷத்தில் மூன்று நாள் கூடிப்பேசிக்கலைவதினால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. நித்தியமாய் ஜனக்ஷேமத்தை நாடி பரோபகாரத்தையே பரமஸாதனமாகக் கொண்டு நம்மவர் உழைக்கப்பழகவேண்டும். அப்படியுழைக்கப் பழகினாலன்றி நம்மவர் முன்னுக்கு வருவது துர்லபம் என்பது இந்த அம்மாளுடைய திடமான கொள்கை. இதை யவர் ஒளிக்காது நன்றாக வெடித்துச் சொன்னதைப்பற்றி மிகவும் சந்தோஷப்படுகிறோம்.

எல்லாவற்றிலும் பெரிதும் புதிதானதுமான மஹாசபை சென்னை விக்டோரியாபப்ளிக்ஹாலில் டிசெம்பர் ௴ 30உ கூடிற்று. அது பாரதமஹிளாபரிஷத் என்னும் பாரதமாதர் சங்கத்தின் முயற்சியால் கூடிற்று. அதற்கு மாதர்களன்றிப் புருஷர்கள்யாரும் வரக்கூடாது. இந்தவிசை கூடியமஹாசபையில் சுமார் 800 ஹிந்துமாதர்கள் வந்திருந்தார்களாம் அன்றி 40 ஆங்கிலேயமாதர்களும் பத்துப்பன்னிரண்டு மஹம்மதிய மாதர்களும் வந்திருந்தார்கள். இந்த தேவிகள் கூட்டத்தில் நடந்த விர்த்தாந்தம் விசேஷமாகச்சொல்லப்படுகிறது. கற்றுத்தேறின மாதர்பலர் அவரவருக்கு இஷ்டமான விஷயங்களைப்பற்றி இங்கிலீஷிலும் தமிழிலும் தெலுங்கிலும் மஹாராஷ்டிரபாஷையிலும் வியாசம் எழுதிவந்துபடித்தார்கள். கற்றுத் தேறினவர்கள் வியாஸம் எழுதிப்படித்துவருகையில், அவர்கள்படித்த வித்தையில் அவ்வளவு சிரத்தையில்லாத பலர், தமக்குள் பலபலவாகக்கூடி "வம்புபேசி" வந்தார்களென்று ஒருமாது தெரிவிக்கிறார். "வம்புபேசி வந்தார்கள்" என்ற குற்றச்சொல் கூறஇடங்கொடுத்ததற்காகத் தேவி மாரெல்லாம் நம்மை மன்னிக்கவேண்டும். ஸ்திரீகள் கூட்டம் கூடினால் அதற்கு "வம்பர் மஹாசபை" யென்று பேரிடுவது வழக்கமாதலால், வழக்கம்பற்றி அவ்வார்த்தை வந்துவிட்டது. அதற்காக அன்னநடையும் அரவிந்தமுகமும் மயிலன்னதோகையும் குயிலன்ன குரலும் வாய்ந்தமாதர்குழாம் நம்மைக் கோபிக்காது மாப்புச்செய்ய அவர்கள் குணமறிந்து கும்பிட்டுக்கேட்டுக்கொள்கிறோம். இந்தியாமுன்னுக்குவரவேண்டுமானால் நம்மாதர்களுடைய விவேகமுதிர்ச்சியால்தான் அது ஆகவேண்டும். ஆகையால் இந்தியாவின் மஹிமைக்கெல்லாமிருப்பிடமாகிய நம்மாதர்கள் சாவித்திரி, சீதை, த்ரோபதை, தமயந்தி, நளாயனி, சுபத்திரை போன்ற தெய்வமணிகளிடத்து விளங்கிய குணங்கள் விளங்கப்பெற்றவர்க

ளாய், வெகுகாலமாய்தௌர்ப்பாக்கிய நசை யிலிருந்துவரும் இந்தியாவைக் கைதூக்கிவிட்டுஅவர்களைப்போல் ஸௌபாக்கியம் நிறைந்ததாகச்செய்ய ஸர்வசம் வல்ல ஈசன் அவர்களுக்கு வேண்டிய சக்தியளிப்பாராகவென்றும்,சத்தியம்சங்களாகிய அவர்கள் அதற்குப் பாத்திரர்களாயிருப்பார்களென்றும் ஸர்வசக்திஸ்வரூபியான பவானியையும் அவளின் புருஷஸ்வரூபமான ஸ்ரீஹரியையும் ஹிருதய பூர்ணமாக வணங்கித்துதித்துப் பிரார்த்தித்துக்கொள்கிறோம். ஓம் தத் ஸத்.

❋ ❋ ❋

## AGRICULTURAL NOTES.
## THE SOWING OF PADDY.
## நெல் விதைத்தல்.

சம்பா நெற்பயிர்செய்வதற்காக நாத்தங்கால் தயார்செய்து விதைத்து வருகிறார்கள். திரிநெல்வேலி ஜில்லாவில் ஒரு ஏகராவிஸ்திரணமுள்ள வயலுக்கு நாத்துவிட வேண்டுமானல் பட்டணம்படியால் 60 படி நெல்விதை விதைத்திருக்கிறார்கள். இதரதமிழ் ஜில்லாக்களில் ஒரு ஏகராவுக்கு பட்டணம்படி 30 முதல் 40 வரையிலுள்ள நெல்விதைவிதைத்திருக்கிறார்கள். கிருஷ்ணுஜில்லாவிலே பட்டணம்படி 5 அல்லது 6 மட்டும்கொண்ட நெல் விதை விதைத்திருக்கிறார்கள். கிருஷ்ணு ஜில்லாவில் விளையும் பயிர் மற்ற தமிழ் ஜில்லாக்களில் விளையும் பயிரைப்போலவே நன்ருக விருப்பதால், திருநெல்வேலியிலும் இதரதமிழ் ஜில்லாக்களிலும் அதிகமான நெல்விதை வீணுகப்போகிறதென்றும், இப்படி வீணுகப்போகும் அதிகவிதையைமிகுத்தால் வெகு பெயர்களுக்கு ஆகாரமாகும் என்றும் வியவசாய இலாகாத்தலைவரான மிஸ்டர் எம். இ. கூச்மான் அவர்கள் ஒரு குறிப்பெழுதியனுப்பியிருக்கிறார்.

அக்குறிப்பில் கண்டபடி கிருஷ்ணுஜில்லாவில் மட்டும்அவ்வளவு குறைந்தநெல்விதை விதைப்பது போதுமானதாயிருப்பதற்குக் காரணமென்னவென்றால், அங்கே நாத்தங்கால்களுக்கு நன்ருக எருவிட்டிருப்பதும், விதைகளை அவ்வளவு நெருக்கமாகவிதைக்காமல் தாராளமாக விதைப்பதுமே காரணமாகச் சொல்லப்படுகிறது. இப்படியிருப்பதால், நெற்பயிர் நன்ருக விர்த்தியாகி வளர்கிறது. நாத்துப்பிடுங்கி நடும்பொழுது ஒரு குழிக்கு ஒரு நெற்பயிர் விகிதமே நாத்து நடுகிறார்கள். ஒவ்வொரு பயிரும் உரம்பெற்றதாயிருப்பதோடு நன்ருக துளருவதற்கு இடவிஸ்தீரணமுமிருப்பதால், ஒவ்வொரு நாத்தும் பலகிளைகள்விட்டு வளர்ந்து கடைசியில், பத்து நாத்துக்களையொன்று சேர்த்து நட்டால் அவையெல்லாம்சேர்ந்துவளர்ந்து எவ்வளவு கதிர்விடுகிறதோ அதைவிட அதிகமாக செழித்துவளர்ந்தஒருபயிர் கதிர் விட்டுக்காட்டுகிறது. பத்துநாத்துகளை ஒன்ருக நடுவதால், வேர்கள் ஒன்ருேடொன்று பின்னிக்கொண்டு, போதுமான ஆகாரமின்றி வளர்ச்சி குன்றிப்போக நேரிடுகிறது. ஒரு கால்நடை மேய்வதற்குப் போதுமானபுலத்தில் பத்துக்கால்நடைகளைச்சேர்த்து மேய விட்டால், பத்துக்கால்நடைகளும் ஆகாரம் போதாமல்இளைத்துப்போகுமே. அப்படியே 10 நாத்துக்களை ஒன்ருகச் சேர்த்து நடுவதால், பயிர் செழித்துவளர சாத்தியமின்றி விளைவு குன்றிப்போகிறது கோயமுத்தூரிலுள்ள கவர்ன்மெண்டு விளைநிலத்தில், ஒரு நாத்திலிருந்து 50 கிளைகள் விட்டிருக்க எண்ணிப்பார்த்தார்கள்.

சிதம்பரத்துக்குசமீபத்திலுள்ள வீரசோழகம் என்னும் ஊரிலுள்ள ஒருவிவேகசாலியான ரயத்து இந்த உண்மையைதனக்குத்தானே பரீக்ஷித்துக் கண்டுபிடித்தார்; இப்பொழுது அவர்ஏகராவுக்கு $2\frac{1}{2}$ப்படி நெல் விதைதான் விதைக்கிறார். அப்படி குறைந்து விதைத்தும் அவருக்கு பக்கத்தாரைக் காட்டிலும் அதிகம் விளைகிறது.

ஒவ்வொரு ரயத்தும் தன் நிலத்தின் ஒரு சிறுபாகத்தில் இந்தவிதம் பரீக்ஷைசெய்து பார்க்கவேண்டும். நாத்தங்கால் தயார் செய்யும்பொழுது அதில் ஒரு பாகத்தில் நன்றாக எருவிட்டு விசாலமாகவிதைவிதைத்து, ஒரு மாசத்துக்கு மேல் நாத்தை நாத்தங்காலில்தானேவிட்டு வைக்காமல், பிடுங்கி நடவேண்டும். விசாலமாக விதைத்திருப்பதால், நாத்து நன்றாகவும் செழிப்பாகவும் வளரும். ஆகையால் ஒரு மாசத்தில் நாத்துப் பிடுங்கி நடத் தயாராயிருக்கும். நாத்துப் பிடுங்கி நடும்பொழுது நல்ல செழிப்புநிலமாக விருந்தால் ஒரு சாண்விட்டும், பஞ்சை நிலமாயிருந்தால் அரைசாண்விட்டும் நாத்து நடவேண்டும். நாத்துநட்டு சில நாள் வரையில் வயலில் தண்ணீர் அதிகமாகக் கட்டக் கூடாது. வேறு விசேஷ ஜாக்கிரதையொன்றும் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. முதலில் நாத்து நட்டதும் பயிர்கள் விகாரமாத்தோன்றும். ஆனால் நட்ட இரண்டு மாசத்தில் ஒவ்வொருபயிரும் கிளைகள் விட்டுத் தழைத்துநன்றாக விளையும். வயல்நெருக்கமாக வழக்கம்போல் நட்டால் எப்படியிருக்குமோ அப்படி பச்சென்று நிறைந்து செழிப்பாகத் தோன்றும். அறுவடை காலத்தில் இப்படி விசாலமாக நடப்பட்ட நாத்துகள் விடும் கதிர்களில் நெல்மணிகள் நிறைந்து ஒவ்வொருமணியும் செழித்துப்பருத்து வழக்கமாக நட்டால் எப்படியோ அதைவிட மாசூல் அதிகமாகக் காணும். இதை ஒவ்வொருவரும் பரீக்ஷித்தறிந்துகொண்டு பழக்கத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

நெற்பயிர்சம்பந்தமாய் எழுதுங்கால் விவசாயஇலாகாவில் இன்ஸ்பெக்டராயிருந்து பென்ஷன்பெற்றுக்கொண்டு நீங்கிய ம-ா-ா ஸ்ரீ வி. இராஜகோபால நாயுடு அவர்கள் "நெல்" என்று நெற்பயிர் சம்பந்தமாக ஒரு புஸ்தகம் எழுதி பிரசுரித்திருக்கிறதை விவசாயிகள் உபயோகிக்கலாமென்று சொல்ல விரும்புகிறோம். இவர் விவசாய இலாகாவில் இருந்துழைத்து வந்ததன்றி இப்பொழுது தென்னிந்திய விவசாயம் என்றொருதமிழ் மாதாந்தரப் பத்திரிகையும் பிரசுரித்துவருகிறார். இப்புஸ்தகம் 5 அத்தியாயங்கள் கொண்டதாய் முதலதிகாரத்தில் காலஸ்திதி முதலிய பொது விஷயங்களும். இரண்டாவது அதிகாரத்தில் பயிர் செய்தலைப் பற்றியும், மூன்றாம் அதிகாரத்தில் நீர்ப்பாய்ச்சலையும், நாலாவதில்மாசூல்உபயோகத்தைப் பற்றியும்,ஐந்தாவதில் நெற்பயிர்க்குநேரிடும் கெடுதிகளைப்பற்றியும் பிரஸ்தாபித்திருக்கிறார். இதில்நெற்பயிர் சம்பந்தமாகவும் அதற்குபகரணமான கருவிகள் சம்பந்தமாகவும் சில படங்களும் இருக்கின்றன.



## CHILLIES—SOMEMORE VARIETIES.

### மிளகாய்.

சென்றவாலியம் 10-11-வது சஞ்சிகையில் விவரிக்கப்பட்ட 1. நீளமிளகாய், 2. குட்டைமிளகாய், 3. தொன்னை மிளகாய், 4. எருதுமூக்குமிளகாய் 5. கொடைமிளகாய், 6. யானைத்திக்கைமிளகாய், 7. உருண்டை மிளகாய், 8. ஊசிமிளகாய், ஆகிய இவற்றைத் தவிர,

9. வெள்ளை மிளகாய்—என்றோர் வகை உண்டு. அது பிஞ்சாகத் தோன்றுவது முதல் பழுக்கும் பரியந்தம் வெள்ளை நிறமாகவேயிருக்கும். ஆனால் காம்புமட்டும் பச்சைநிறம். பழம் சிவப்பு. இதுபார்க்க வெகு அழகாயுள்ளது. இது 7-வது 8-வது வகுப்பை ஒத்து வானத்தைப் பார்த்துக் காய்க்கும் சுபாவமே இதற்குள்ளது. இதன்காரம் கடுமையானதே. இது தஞ்சை ஜில்லாவிலுள்ள வெத்திலைக் கொடிக்கால்களில் வைத்துப் பயிரிடப்படுகிறது. இதன் நிறத்தினால் இதற்கு வெள்ளை மிளகாய் என்றபெயர் ஏற்றது. பலகாராதிகளின் உருசியோடு கூட வர்ணவிசேஷமும் மனோரம்மியத்திற்கு ஒத்தது ஆகையால் "வடகம்" முதலானவற்றிற்கு வெள்ளை வர்

ணத்தை மாற்றுதிருக்கவும் போதுமான மட்டில் காரம் புகட்டவும் இந்த வெள்ளை மிளகாய்விசேஷமாக உபயோகப்படுகிறது. இதே வகையில் "கடுகுசிறுக்க காரம்வலுக்கும்" என்றபடி,

10. வெள்ளை ஊசி மிளகாய் என்றோர் வகையுண்டு. அதுவும் இதேகுணத்தையும் உபயோகத்தையும் கொண்டதுதான். இது பயிரிடும் பேதத்தைப் பொருத்து உருவம் சிறுக்கலாம் என்று சந்தேகித்துப் பார்த்தும் விதை வழி வேறு தான் என்று விளங்கிற்று. இந்த வகையில்,

11. கறுப்புமிளகாய் என்ற ஓர் தினிசுஉண்டு. இதுவும் அவ்வாறே கொடிக்கால்களில் பயிரிடப்படுகிறது. இது, காய் கறுப்பாய் இருப்பது தவிர செடிகளின் கிளைகளும் கரிசல் நிறமே. உருகிமுதலியவற்றில் ஊசி மிளகாயை ஒத்ததே.

எஸ். முத்துகுமாரசாமிபிள்ளை.



"FREE FROM BONDS"

(THE AUTOBIOGRAPHY OF A TALUQ GUMASTAH)

## *அவிழ்த்துவிட்ட கழுதை.

(ஒரு தாலூகா குமாஸ்தாவின் சரித்திரம்)

### யௌவனம் (விவாகம்).

இந்த சரித்திரத்தின் முதல் பாகத்தை முழுவதும் தொடர்ச்சியாய்ப் படித்து வந்திருக்கும் நண்பரில் சிலர் இதன் மற்றபாகங்களையும் படிக்க ஆவலுள்ளவர்களாயிருக்கலாம். அப்படி இருக்கத்தான் வேண்டும். ஏனெனில் எப்பொழுது இந்த சரித்திரத்தை மேலும் எழுதவேண்டுமென்று எனக்கு ஆவலுண்டாயிற்றோ, அதனாலேயே இதைப் படிக்க ஆவலுள்ள (ஸ்திரீயோ புருஷனோ) ஒரு ஆத்மா எங்கேயோ காத்துக்கொண்டிருக்கிறதென்று ஏற்படுகிறது. உள்ளும்புறமும் ஒன்றாயிருந்து வேலைசெய்யும் பகவான் குழந்தையின் வயிற்றிற் பசியுண்டாகும்போதே தாயினிடத்தில் பாலையும் உண்டாக்குவதுபோல் யாருக்கோ இந்தக்கதையைக் கேட்க ஆவலிருப்பதனால் தான் என்னை எழுதும்படி தூண்டுகிறார். அந்த ஆத்மா பூலோகத்தி லிருக்குமோ சந்திரமண்டலத்தி லிருக்குமோ எனக்குத் தெரியாது. இந்தப்பிரமாண்டத்தில் எனக்கும் இன்னும் ஏதோ ஒரு ஆத்மாவுக்கும் பூர்ணமான மனப்பொருத்த மிருக்கவேண்டுமென்று உறுதியாய் நம்புகிறேன். இப்பொழுதே எங்களிருவருக்கும் பரஸ்பரமாயுள்ள வசீகரசக்தி என்னை இழுக்கிறாற்போலிருக்கிறது.

எனக்குப் பதினைந்தாவதுவயதில் விவாகமாயிற்று. நான் ஒரு விடுமுறையில் பள்ளிக்கூடம்விட்டு கிராமத்திற்கு வந்திருந்தபொழுது எங்கள் வீட்டு வாசல்திண்ணையில் ஒருவர் உட்கார்ந்திருந்தார். நான் வெளியே போயிருந்தவன் வீட்டுக்குத் திரும்பி வந்ததும் அவர் என்னை இரண்டுமூன்றுதரம் உற்றுப்பார்த்தார். நான் அதை அப்பொழுது ஒன்றும் கவனிக்கவில்லை. உள்ளேபோய் உன்தாயாரை "நம்வீட்டுக்கு யார் வந்திருக்கிறார்கள்" என்றுகேட்டேன். அவள் உனக்குக் கலியாணம் வரப்போகிறதென்றாள். நான்மறுபடி திருச்சி பள்ளிக்கூடத்துக்குப் போனபிறகு என்தகப்பனாரிடமிருந்து ஒருகடிதம் வந்தது. எனக்கு விவாகத்துக்கு முகூர்த்தம் வைத்திருப்பதாயும் நான் உடனே உபாத்தியாயரிடம் உத்தரவு கேட்டுக்கொண்டு அவரையும் கலியாணத்துக்கழைத்துக்கொண்டு வரவேண்டுமென்றும் எழுதியிருந்தது. உடனே எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. உடனே தாமதமின்றி ஒருபதில் கடிதம் எழுதினேன்.

"மகா-ரா-ரா-ஸ்ரீ அப்பா அவர்களுக்கு தா—கு—சாஷ்டாங்க நமஸ்காரத்துடன் விக்ஞாபனம். க்ஷேமம் க்ஷேமத்துக்குஎழுதவும்.

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடையறியாது.

நான் இங்கே சௌக்கியமாய் படித்துக்கொண்டுவருகிறேன். என் கலியாணத்துக்கு இப்பொழுதென்ன அவசரம்? நான் பி. ஏ. பரீக்ஷையில் தேறினபிறகு பெரிய மனுஷியர்கள் வலுவிலேயே பெண்ணைக் கொடுப்பார்கள். இப்பொழுது தத்கால செலவுக்குப் பாதிரிதுரை வேண்டியமட்டும் கொடுக்கத் தயாராயிருக்கிறார். ஆதலால் அவசரப்படவேண்டாம். மேலும் முன்பின்னறியாத பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொள்ள எனக்கிஷ்டமில்லை. அவள் ஸ்வபாவத்துக்கு நான்எப்படியாவது ஒத்துக்கொண்டாலும் என் ஸ்வபாவம் அவளுக்கு ஒத்துக்கொள்ளுமோ என்னவோ! என் முகத்தைப்பார்த்தால் அவள் என்ன நினைப்பாளோ! எனக்கும் குடும்பபாரத்துக்கும் வெகுதூரம் என்று என்மனமே சொல்லுகிறது. எனக்கு உலகநடவடிக்கைகள் யாதொன்றும் தெரியாது. தெரிந்துகொள்ளவும் இஷ்டமில்லை. என்னை என் அனுவசியமாய் கஷ்டத்தில் இழுத்துவிட யத்தனிக்கிறீர்கள். வித்தையை விருத்திசெய்துகொண்டும், சித்திரங்கள் எழுதிக்கொண்டும் இருக்கவேண்டுமென்று எனக்கு ஆவலாயிருக்கிறது. "கல்வி கரையில, கற்பவர் நாள் சில." ஆதலால்எனக்கு இந்த உலகத்துக்கவலைகளே.வேண்டாம். என்னை விட்டுவிடுங்கள் தங்கள் உத்தரவுக்கு மீறி எழுதுவதாக என்பேரில் கோபிக்க வேண்டாம். என்னால் வேறுவிதமாய் நடந்துகொள்ள முடியவில்லை. தயவுசெய்து மன்னிக்கக் கோருகிறேன். வேணும் அநேக சாஷ்டாங்க நமஸ்காரம்."

யதார்த்தத்தில் என முகத்தைப் பார்த்தால் யாரும் பெண்கொடுக்க மாட்டார்கள் என்று நம்பியிருந்தேன். ஆகையால் எனக்கும் கலியாணம் என்றதும் எனக்கே ஆச்சரியமாயிருந்தது. நான் எழுதிய கடிதம் என் தகப்பனாருக்குச் சேரக் கொஞ்சம் தாமதமாயிற்று. கலியாணத்துக்கு இரண்டுநாள் முன்னால்தான் அது அவரிடம் சேர்ந்தது. அவர் அதைப் பிரித்துப்பார்த்தது முதல் என்னிடத்தில் வைத்திருந்த நம்பிக்கையை விட்டுவிட்டார். "இவனிடத்தில் ஏதோ மோசமிருக்கிறது. ஆள் உள்ளிருக்கிறான்" என்று அவருக்கு அப்பொழுதுதான் தெரிந்தது. அவர் என் கலியாணத்தை நிச்சயம் செய்து பெண்வீட்டுக்காரரிடமிருந்து பணம் வாங்கிவிட்டமையால் உடனே தபால்வண்டியேறி நேரில் என்னிடம் வந்துவிட்டார். வந்து "கலியாணம் பண்ணிக்கொள் என்றால் வேண்டாம் என்கிறாயே என்ன ரொம்பபெரியமனுஷியனாய்ப் போய்விட்டாயோ? படிப்பு ரொம்ப முற்றிப்போய் விட்டதோ!" என்று கண்களில் நெருப்புப் பறக்கக் கேட்கவே, நான் "இல்லை,—இப்பொழுது வந்து,—இப்பொழுதுதான் பள்ளிக்கூடம் திறந்து ஒருமாதம்கூட ஆகவில்லை. ரஜா கிடைக்காதென்று தோன்றிற்று. விடுமுறை நாளிலெல்லாம் கலியாணம் செய்துகொள்ளக் கூடாதா என்று வாத்தியார் சொல்லுகிறார். மேலும் பாடங்கள் பாதியில் நின்றுவிடுமே என்று கவலையாயிருக்கிறது" என்றி ஒருவழியாய் சமாதானம் சொல்லிமுடித்தேன். காலை முதல் சாப்பிடாமல் வெயிலில் வந்திருக்கும் அவருடைய முகத்தைப் பார்த்தவுடன் நான் கடிதத்தில் எழுதியிருந்த காரணங்களை அவரிடம் நேரில்சொல்ல நாவெழவில்லை அவருடன் தத்துவஞானம்பேச அதுதானா சமயம்? மேலும் விராடராஜனுடைய குமாரனாகிய உத்தரன் சித்திரங்களில் எழுதியிருக்கும் யுத்தவீரர்களோடு வெகு தைரியமாய்ச் சண்டை செய்து, யுத்தகளத்துக்குப் போனதும் புறங்காட்டி ஓடியது போல் நானும் யாரும்பாராத இடத்தில் காகிதத்தையும் பேனாவையும் வைத்துக்கொண்டு வெகு தைரியமாய் எழுதுவேனேயொழிய நேருக்கு நேராக யாராவது பேசவந்தால் தலைகுனிந்து விடுவேன். வாஸ்தவத்தில் நான் வெகு பயங்காளி; வாயில்லாப் பூச்சி. பல்கூட தேய்க்காமல் பசியோடிருக்கும் என் தகப்பனாருடைய முகத்தைப் பார்

த்த உடன், எனக்கே பரிதாபமா யிருந்தது. நான் நம்பிக்கைத் துரோகி என்று எனக்கே தோன்றிற்று. ஆதலால் அவரைக் கண்டவுடன் அப்படியே அவர் பின்னால் புறப்பட்டுக் கலியாண ஊருக்குவந்துசேர்ந்தேன். தபால் வண்டியிலுள்ள பிரயாணிகள் நாங்கள் ஏதோ துக்கத்துக்குப் போகிறோமென்று நினைத்தார்களாதலால் நாங்கள் கலியாணத்துக்குப் போகிறவர்கள் என்றும், மாப்பிள்ளை நான் தான் என்றும் தெரியவந்தவுடன் "என் மாப்பிள்ளை அழுகிறார்? சிறப்பாயில்லையே!" என்றார்கள். என்னைக் கண்டவுடன் என் தாயார் முதலிய எல்லோரும் ஒவ்வொருவராய்க் கட்டிக்கொண்டு விம்மி அழுதார்கள். என் தாயாருக்கு நான் பாதிரிகளால் கிறிஸ்தவமதத்தில் சேர்க்கப்பட்டேனோ என்னவோ என்றுபயம். அப்படியொன்றுமில்லை என்று தெரிந்ததும் அவளுக்கிருந்த சந்தோஷத்துக் களவில்லை. எப்படியாவது நான் வந்துசேர்ந்ததே போதுமென்றிருந்தாள். மறுநாள் நானும் கிருஷ்ணார்ப்பணம் என்று தாலியைக் கட்டினேன். கலியாணம் கழித்து ஊருக்குப் போகும்பொழுது மட்டும் இவ்வளவு சமீபத்தில் கிடைத்த சிநேகத்தை இவ்வளவு சீக்கிரத்தில் விட்டுப்பிரியவேண்டி யிருக்கிறதே என்று கொஞ்சம் வருத்தமாயிருந்தது.

தலைதீபாவளிக்கு நான் மாமனார் வீட்டுக்குப் போகும்பொழுது என் தாயாரும் என்னுடன்கூட வந்தாள். கலியாணத்தின் போதே நான் மாப்பிள்ளை உத்தியோகத்துக் கேற்ற சிறப்பாயில்லை என்று என்பேரில் புகார் உண்டு. நான் தாலுகா குமாஸ்தா உத்தியோகத்துக்கு வந்தபிறகும் அந்தபுகார் மாறவில்லை. பொதுவாய் உத்தியோகஸ்தர்கள் சிறப்பாயிருக்கக்கூடாது என்பது என் கொள்கை. நாமும் ஒருவரை பயமுறுத்தி ஒரு காரியத்தை சாதிக்கவும் கூடாது. நம்மையும் பயமுறுத்திப் பிறர் தங்கள் காரியங்களை சாதித்துக்கொள்ளும்படி விடவுங்கூடாதுஎன்பது என்கொள்கை. பாமரஜனங்கள் சட்டை தலைப்பாகைகளுக்கும் பில்லைதரித்த சேவகர்களுக்கும் பயப்பட நாம் பார்த்திருக்கக் கூடாது என்று எனக்குத் தோன்றினமையால், தாசில்தார் கச்சேரிக்கு வரும் தினத்தில் மட்டும் துவைத்து மேஜைக்குள் வைத்துப் பூட்டப்பட்ட ஒரு பழைய சட்டையையும் தலைப்பாகையையும் தரிப்பேன். தோட்டிகளோடும் இதர குமாஸ்தாக்களோடும் சேவகர்களோடும் ஏககாலத்தில் ஒரேவிஷயத்தைப் பற்றி ஒருவருக்கொருவர் வித்தியாசம் பாராட்டாமல் பேசுவேன். இதனால் சிலகௌரவமுள்ள குமாஸ்தாக்கள் என்னுடன் அதிகமாய் நெருங்கிக் கலந்து பேச பயப்படுவார்கள். தீபாவளிக்கு நான் மாமனார் வீட்டுக்குப் போகும் பொழுது தினம் கட்டிக்கொள்ளுகிற வேஷ்டியையே கட்டிக்கொண்டு போனேன். வண்ணான் சரியாய் வராமையால் அது கொஞ்சம் அழுக்கேறி யிருந்தது. வாஸ்தவத்தில் அது இரண்டேமாதமாகி யிருந்தபோதிலும், என் தேகத்தில் வெகுசீக்கிரம் அழுக்கேறுமாதலால், துவைத்து ஆறுமாதமானதுபோலிருந்தது. நான் பருத்த மனிதனல்ல வென்றாலும் வியர்வைக்குக் குறைவில்லை. (இதுவே நான் அந்தரங்கத்தில் சுத்தவெதுளி என்பதற்கு அத்தாக்ஷி. நான் சட்டை போடாததற்கு இதுவும் ஒருகாரணம்.) என்தேகத்தில் அழுக்குப்பட்டால், மேல்வேஷ்டி எவ்வளவுவிலையுயர்ந்ததானாலும் அதனாலேயே துடைத்துவிடுவேன். இதுவே சுத்தமான மனிதனுக் கடையாளம். வேஷ்டி சுத்தமா யிருப்பதைக் காட்டிலும் உடம்பு சுத்தமாயிருக்க வேண்டிய தவசியமல்லவா? சிலர் தங்கள் சரிகை அங்கவஸ்திரங்களை வண்ணான் மடிப்புக்கலையாமல் மேலே போட்டுக்கொண்டு தாங்கள் உட்காருகிற இடம் அழுக்காயிருந்தால் அதைக்கையினால் துடைத்து விட்டும் நாக்கினால் நக்கிவிட்டும் உட்காருகிறார்கள். சரீரத்துக்காக வேஷ்டியா, வேஷ்டிக்காக சரீரமா என்று தெரிந்து கொள்ளுகிறதில்லை.

என்தாயார் என்வேஷ்டியைப் பார்த்துவிட்டு, இந்தவேஷ்டியுடன் மாமனார் வீட்டுக்குப்போனால், மாப்பிள்ளைக்கு வேஷ்டிவாங்கிக்கொள்ள கதியில்லையென்று நினைக்கமாட்டார்களா? ஆதலால் நீ இங்கேதானே கடைக்குப்போய் ஒரு புதுவேஷ்டி வாங்கிக்கொள் என்றாள். அதற்கு நான் புதுவேஷ்டியுடன் போனால், இத்தனை நாளாய்க் கந்தல்வேஷ்டி உடுத்திருந்தான் போலிருக்கிறது. மாமனார் வீட்டுக்குப்போகிறதற்காகக் கடையில் வாடகைக்கு வேஷ்டி எடுத்து வந்திருக்கிறான் என்று நினைத்தால் என்னசெய்கிறது. நான் யதார்த்தத்தில் வழக்கமாய் உடுக்கிற உடையைக்காட்டிலும் மேலான உடை உடுப்பவனைப் பிறருக்குத்தோற்ற எனக்கிஷ்டமில்லை" என்றேன். மாமனார் ஊருக்குப்போகிறவழியிலெல்லாம் ஜவுளிக்கடைகளாயிருந்தன. என் தாயார் என் மோவாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டு பல்லைக்கெஞ்சினாள். நான் ஒன்றுக்கும் அசையவில்லை. கோவென்று அழுதாள். வழியில்போகும் ஜனங்களெல்லாம் என்னைக் கோபித்துக்கொண்டார்கள். எனக்கும் அழுகைவந்துவிட்டது. ஆனால் புதுவேஷ்டிமட்டும் வாங்கவில்லை. உலகம் இப்படிதானிருக்கும். அதற்கு நாமிடங் கொடுக்கக்கூடாது என்று அறிந்துகொண்டேன்.

இப்பொழுது நான் என்தகப்பனாரைக் கலியாண தினத்துக்குமுன் படுத்தின பாட்டையும் என் தாயாரை தீபாவளியில் படுத்தின பாட்டையும் நினைத்தால் எனக்கே பச்சாத்தாபமுண்டாகிறது. நான் கஷ்டப்படும்போதெல்லாம் அவர்கள் சாபந்தானோ என்று தோன்றுகிறது.

நான் கலியாணம் வேண்டாமென்றதற்கு இன்னொரு காரணமுண்டு. நான் மணியன் வீட்டுக்கு ஒருதடவை போயிருந்தபொழுது அங்கே அவனுடைய அக்காள்மகள் 10-வயதுப்பெண் ஒருத்தி விளையாடிக்கொண்டிருந்தாள். அவள் தாயில்லாப்பெண்; தகப்பனார் மறுவிவாகம் செய்துகொண்டு சுகமாயிருந்தார். இந்தப்பெண் அம்மான் வீட்டில் வளர்ந்து வந்தாள். என்னைக் கண்டவுடன் "இவர் யார் மாமா?" என்று மணியனை வினவினாள்.

"உனக்கு மாப்பிள்ளை பிடித்துவந்திருக்கிறேன்" என்று மணியன் சிரித்தான்.

"எனக்கு இவர் தகாதோ? என்ன சிரிக்கிறாயே?" என்றாள்.

"இல்லை யதார்த்தமாகவே தான் சொன்னேன்" என்றான் மணியன்.

"என்னவோ மாமா, நான் அதிக ஆசைப்படவில்லை. எனக்கு இவர் மாதிரிகிடைத்தால் போதும்" என்றாள். இந்த சம்பாஷணையை நான் வாசல் திண்ணையிலிருந்து ஒட்டுக்கேட்டுக்கொண்டிருந்தேன். சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப்பெண் வெளியேவந்தாள். அவள் முகத்தைப்பார்த்தேன். கறுப்பாகத்தானிருந்தது. ஆனால் கண்களில் தெளிவும் அமைதியும் தைரியமும் விளங்கின. அவளுடைய கூரியமூக்கு "இவளை ஏமாற்ற முடியா"தென்று வெளியிட்டது.

நான் சித்திரம் எழுதுவேனென்று கேள்விப்பட்டுக் காகிதமும் எழுதுகோலும் எடுத்துக்கொண்டுவந்து "எனக்கொரு சித்திரம் எழுதிக்கொடுங்கள்" என்றாள்.

"என்னசித்திரம் வேண்டும்" என்றேன்.

"இறக்கப்போகிற தாயார் தன்பெண்ணைப் பார்த்து ஆசீர்வாதம் செய்வதுபோல் ஒரு படம் வேண்டும்" என்றாள்.

"அதுமிகவும் கடினமாயிற்றே. மேலும் அந்தமாதிரி சந்தர்ப்பங்களை நான் கண்ணால் கண்டதில்லை. என்மனதினால் நினைத்துக்கொள்ளமுடியவில்லை." என்றேன். "ஆனால் வேறொன்று ஏதாவது எழுதித்தாருங்கள்" என்றாள்.

"வேறு என்னவேண்டும்?" என்றேன்.

ராமனும் ஸீதையும் ஒருவரை ஒருவர் முதல்முதல் பார்ப்பதுபோல் ஒரு படம் எழுதலாமா?" என்றாள்.

"பெருமாள் வேண்டாமென்று பெத்தப் பெருமாளைவரவழைத்ததுபோலிருக்கிறதே" என்று நினைத்துக் கொண்டு "இதெல்லாம் என்னால் முடியாது" தென்று சொல்லிவிட்டு காகிதத்தைவாங்கி ஒருபசு தன் கன்றுக்குட்டியை நக்கிக் கொடுப்பதுபோல் ஒரு அவசரக்கோலம் போட்டுக் கொடுத்தேன். அதை வாங்கிக்கொண்டு அதை உற்றுப் பார்த்துப் பார்த்து சந்தோஷித்தாள் அதைப் போல் தானும் முயன்றாள்.

"உனக்கு பாடத்தெரியுமாமே, ஒரு பாட்டுச்சொல்லு" என்றேன்.

"லக்கனிராஜமார்க்கமு—" என்றுஉடனே பாட ஆரம்பித்து வெள்ளிமணிபோன்ற குரலுடன் ஐந்துநிமிஷம்பாடிமுடித்தாள். அக்ஷரங்கள் சுத்தமாயும் ராகம் இனிமையாயுமிருந்தது

அதுமுதல் நாங்களிருவரும்ஸ்நேகம். மணியன் அவளெதிரில் என்னை அடிக்கடி மாப்பிள்ளை என்று பரிகாசம் செய்வான். நான் திரும்பி ஊருக்குப் போகையில் "ஏதாவது புதிதாய்ப்படம் எழுதினால் மணியன் மூலமாய் எனக்குக் காண்பிக்கவேண்டும்" என்றாள். நான் "அப்படியே ஆகட்டும்" என்றேன். அதுமுதல் எனக்கு ஒருமாதம் அவள் ஞாபகமாகவே யிருந்தது. கலியாணம் செய்துகொண்டால் அவளைத்தான் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென் றிருந்தேன். இப்படியிருக்கையில் என் தகப்பனாரிடமிருந்து கலியாணக்கடிதம் வந்தது. இப்பொழுது கல்யாணி (அதுதான் அப்பெண்ணின் பெயர்) ஒரு காலேஜ் உபாத்தியாயருடைய மனைவியாய் வாழ்கிறாள்.

தாலுகாகுமாஸ்தா.

---

## HEALTH OF BODY.

## தேக சௌக்கியம்.

சரீரத்தைப் பார்த்துக்கொள்ளுகிறதற்காக நம்முடைய தேகத்தில் பல கருவிகளிருக்கின்றன. அவை, இருதயம், நுரையீரல், அன்னாசயம், மூளை, குண்டிக்காய் முதலியவையே. இவற்றின் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே தொழிலுண்டு. அது ஒழுங்காய் நடைபெறுவதே "தேகசௌக்கியம்" எனப்பெயர் பெறும். அது தங்கள் தங்களுடைய நிலையில் நின்று பிறழ்ந்து நடைபெறுவதே "அசௌக்கியம்" எனப்பெயர் பெறும். இவ்வாறு முறையின்றி யியங்குவதே "வியாதி" யெனப் பெயர்பெறும்.

இந்த உலகத்தின் கண்ணே நாம் அடையும் பலபேறுகளுள், நோயற்ற வாழ்வைப்பார்க்கிலும் மிகச்சிறந்த பேறுளதோ? நாம் சரீர சுகமுற்றிருக்கும் வரையில்தான் நாம் நமக்கேற்பட்ட கடமைகளைச் செவ்வையாய்ச் செய்யச் சக்தியுள்ளவர்களா யிருக்கிறோம். அவ்வாறின்றி சரீரம் சுகவீனமாகவிருக்கையில், அதனாற் பெருந்தீங்குகள் விளைவதன்னியில் நாமும் பாயும் படுக்கையுமாயிருந்து வருத்த முறுகிறோம். அந்த சமயத்தில் வியாதியாளன் வருந்துவதன்றியும், அவனைப் பெற்றோரும், உறவினர், சிநேகிதர் முதலியோரும் துன்பமடைகின்றனர். மாடமாளிகையில், மகிழும் மன்னராயினும் அசௌக்கியமாக விருப்பாராயின் அவர் வருத்தமுறுகின்றவரேயாம்; சிறு குடிசையிலேயே வசிக்கும் குறவனாயினும், தேக சௌக்கியமுள்ளவனாகவிருப்பானாயின், அவன் சுகமுற்று வாழ்பவனேயாம்.

பாலியவயதில் பற்பல துர்நடத்தைகளால் சரீர சுகத்தையிழந்து, விருத்தாப்பியத்தில் அதைக்குறித்து நினைக்குந்தோறும் அடங்கா வருத்தத்தையடைவது மானிடவியல்பாகவி

ருக்கின்றது. இம்மாதிரியாக தேகசௌக்கியத்தையிழப்பதுமிக்கதவறே. இதைக்குறித்து அநேகவிதமான நற்புத்தி புகட்டினபோதிலும் அது செவிடன் காதிலூதிய சங்கு போலாம். இவ்விஷயத்தில் நமது சரீரம் இழக்கும் பலத்தைப் பின் எவ்வித மருந்துகளினாலும் முன்போல் பெறுவது ஒருக்காலுமில்லையென அநேக வைத்திய நிபுணர்கள் சொல்லுகிறார்கள்.

செல்வத்தின் பேரிலேயே திர்ஷ்டியுள்ள ஒருவன் மற்றைய விஷயங்களைக் கவனியாது திரவியத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பதால், சிக்கனம் என்பது குறைவுக்குக் காரணமாகிறதே போல, நோயாளி தன் தேக சௌக்கியமே எதைப்பார்க்கிலும் அதிக மேன்மையுள்ளதென்று நினைப்பதால் தேக சௌக்கியத்தைக் கருதவும் கண்டார் இகழவும் இடமுண்டாகிறது. இவ்விருவரும் நாம் இந்த உலகத்தில் பிறந்தது எதற்காகவென்றும், நாம் இங்கு செய்யவேண்டிய காரியங்கள் இன்னதென்றும் கண்டுபிடிக்காது தாம் தாம்கொண்ட எண்ணங்களிலேயே காலத்தைப்போக்குகின்றனர். இவ்வாறு இவ்விருவர்களின் வாழ்நாளும் தனக்கும் பிறர்க்கும் யாதொருவித பயனுமின்றி வீணாளாகக்கழிகின்றது. இந்தப்பூவுலகத்தில் நாம் பெறக்கூடிய சம்பத்தையும் அடையாது வருந்துகின்றோம்.

தேகசௌக்கியமானது நம்முடைய சுகானுபவத்திற்கன்றி கடமைகளைச் செய்கிறதற்குமின்றியமையாதது. ஆதலால் தேக சௌக்கியத்தைச் சிறிதுங்கவனியாது நடப்பதுஅறிவீனமன்றி பெருந்தவறுமே. சிறிதுபொழுது சொற்ப இன்பத்தைக்கருதி தன் ஆயுள்கால முழுவதும் பெரும் வியாதிக்காளாகி அவ்வியாதிக்கே அநேகர் இரையுமாகின்றனர். இதையெல்லாம் சற்று யோஜித்துப்பார்க்கையில் தான் அடைந்த சொற்பவின்பத்தின் காரணமாக தனக்கும், தன்னுடைய நாட்டாருக்கும் செய்யவேண்டிய பற்பல காரியங்களும் செய்யாக்குறையாய்ப் போகின்றன.

அபாரசக்தி பூண்டு ஓய்வின்றி நடைபெறும் மனமானது நோயால் கட்டுண்டு தேகத்தில் கிடந்து வருந்துவதைக்காட்டிலும் பரிதாபமான காட்சி வேறில்லை. வியாதியாளர்கள் தன் வாழ்நாள் முழுவதையும் வீண் ஆலோசனையிலேயே செலவிடுகின்றனர். தான் எண்ணியகாரியத்தை யெண்ணியவாறு முடிக்க இயலாது தவிக்கின்றனர். அல்லாமலும் மனைவி, மக்கள் முதலியோர்கள் வியாதியாளனுக்குச் செய்யும் பணிவிடைகளை மிக்க மனவெறுப்புடன் புரிகின்றனர். இவன் இவ்விதத்துக்கத்துக்குள்ளாகி வருந்துவதினாலேயே தன்னைப் பீடித்திருக்கும் வியாதி பதின்மடங்கு அதிகமாக விருத்தியாகி பலவாறு வருத்தமுறுகிறான். இப்படி நாளுக்குநாள் இவன் மனவருத்தமேலிட கடைசியில் வியாதிக்கே இரையாகும்படி நேர்கிறது. யமன் இளைஞரென்றும், முதியோரென்றும், மன்னனென்றும் மகா ஏழைக்குடியென்றும் உயர்ந்தவரென்றும் தாழ்ந்தவரென்றும் வேற்றுமைபாராது தன்கால வரையரைப்படி எல்லாரையும் கருதுகின்றதேயொப்ப, நோயும் எல்லாரையும் யாதொருவித வித்தியாசமின்றிப் பீடிக்கின்றது. வியாதி வந்தடைந்தவுடன் அதிக வுல்லாசமாக செங்கோல் செலுத்தும் வேந்தனும் உல்லாசமின்றி துயருறுகின்றான். கல்விகற்றற்கும் தேகசௌக்கியம் அவசியம். கற்றபின் அதைப்பலருக்கும் பயன்படுமாறு செய்கிறதற்கும் தேகசௌக்கியம் அவசியம். பூரணபாண்டித்தியமுடைய மகாகல்விமானும் நோயடையின் தன் கல்விகுறைந்து நாளடைவில் தன்கல்வி மறதியென்னும் பகைவனுக்கு ஒப்படைக்கின்றான். படித்தவர் என்று யாவரும் புகழும் மகாகீர்த்தியும் குறைகின்றது. தேகசௌக்கியமின்றி இவ்வுலகத்தில் ஒருகாரியமும் நன்கு கடைப்பிடி

த்தொழுக முடியாதென்று கூறவும் வேண்டுமோ? இன்பநுகர்ச்சியினால் அறிவு கலங்கி வாழும் மானிடரைக்குறித்து மாத்திரம் நாம் குற்றங்கூற இடமில்லை. அநேகவித வியாபார பாடுபடுகிறவர்களும், அநேக சாஸ்திரங்களைக்கற்கிறவர்களும், தங்களுக்கு இன்றியமையாததாகிய தேகசௌக்கியத்தை யசட்டை செய்கின்றனர். அளவிலா இன்ப நுகர்ச்சியால் சிலரும்; அளவுகடந்து கல்வி கற்பதினால் சிலரும், தேகத்தின்மிகுதி உழைப்பினால் சிலரும், செல்வம் சம்பாதிப்பதில் அதிகமனக்கவலை, தேகப்பிரயாசை முதலியவைகளால் சிலரும் சரீரத்துக்கு வேண்டிய தேகமுயற்சியின்றி சிலரும், செல்வமடைந்தோர் காலவேற்றுமையால் தரித்திராவதினால் உண்டாகும் மனக்கவலையினால் சிலரும், குடும்பத்தில் சகிக்கமுடியாத துன்பங்கள் நேரிடுவதினால் சிலரும், மனைவிமக்கள் இறப்பதினால் உண்டாகும் துன்பத்தினால் சிலரும், ஆக பலர், தேகசௌக்கியத்தை இழக்கின்றனர். மனக்கவலையினால் இழக்கும் தேகசௌக்கியத்தை சீர்திருத்த அந்த மனக்கவலையையொழிப்பதைத் தவிர வேறொன்றுமில்லை. இதற்கு வைத்திய முறைகளில் கைதேர்ந்த தன்வந்திரியும் தன்னுடைய நூலில் மருந்து சொல்லவில்லை. சிலர் செல்வமிருந்தாலல்லவோ தேகசௌக்கியமாக விருக்கலாமென்று நினைக்கின்றனர். அது தவறே. செல்வத்தைப் பார்க்கிலும் தேகசௌக்கியம் எத்தனையோமடங்கு சிலாக்கியம். ஏனென்றால், தேகசௌக்கியமிருந்தால்தான் யோசனையை நாலாவழிகளிற் செலுத்தித் திரவியம் சம்பாதிக்கக்கூடிய வேற்பாடுகளை செய்யலாம். நாம் தரித்திரராக விருந்தால் ஐசுவரியவானாக ஆகலாம்; கற்றகல்வியை மறந்தால் பின் ஓதிக்கொள்ளலாம். நமது ஒழுக்கங் குறைவுபடினும் சீர்திருத்திக் கொள்ளலாம். ஆனால் பலநோய்களால் கெட்டுப்போனபஞ்சேந்திரியங்களை முன்னிருந்த நிலைமைக்குக் கொண்டுவரவும், குறைந்த ஜீரணசக்தியை மறுபடியுந் தன்னுடைய நிலைமைக்குக் கொண்டுவரவும் முடியா.

இப்பொழுது ஆங்கிலேயக் கலாசாலைகளில் கல்விபயிலும் மாணாக்கர்களில் அநேகர் காலக்கிரமமின்றி இரவும் பகலும் ஓயாது கல்வி கற்பதிலேயே பெரும்முயற்சிசெய்து வருவதினால் சரீரசுகத்தை யிழக்கின்றனர். அல்லாமலும் பெற்றோர்களில் சிலர் தங்கள் புதல்வர்களை இடைவிடாது வாசிக்குமாறு வற்புறுத்துவதினால் சிலர் தேகசௌக்கியத்தை யிழக்கின்றனர். அறம், பொருள், இன்பம், வீடு முதலாகிய நான்கு புருஷார்த்தங்களையடைவதற்கு மூலகாரணமாயுள்ள கல்வியைக் கற்பதற்குத் தேகசௌக்கியம் அத்தியாவசியம். நமக்கு நாலாவழிகளிலும் நன்மையைப் பயப்பதாகிய தேகசௌக்கியத்தைப் பொன்னேபோல் போற்றவேண்டும்.

எதாகிலும் ஒரு வியாதியாவது, அல்லது தேகத்தில் ஒருவலியாவது உண்டாகுமாயின் செய்யக்கூடாத ஒரு குற்றத்தை நாம் செய்திருக்கிறோமென்று நன்றாய் அறிந்துகொள்ளவேண்டும். காரணமின்றிக் காரியமில்லையாதலினால் எந்த வியாதியும் எந்த தேகவலியும் காரணமின்றி உண்டாவதில்லை. எவனாயினும் நல்லபாம்பிருக்கும் புற்றுக்குள் கைவிட எத்தனிப்பானா? எத்தனிக்காவாறுபோல் நமது தேகத்திற்குக் கெடுதல் விளைவிக்கும்படியான வஸ்துக்கள் நாம் உட்கொள்ளும் ஆகாரத்தினாலேயாயினும், பருகும் பானத்தோடாயினும் சுவாசிக்கும் சுவாசக்காற்றுடனாயினும் கலந்து நமது தேகத்திற்குள் சென்றிருக்க வேண்டும். எவனும் கெடுதலானவை யென்று அறிந்திருப்பானாயின் அதை எந்தக் காரணத்தினாலாவது தன் தேகத்திற்குள் போகாவண்ணம் செய்ய முயல்வானே யொழிய அதையுட்கொள்ள சகியான். அநேகர் அதையறியாமலே கெடுதல் விளைவிக்கும்படியான ஆகாரம், பானம்,

காற்று முதலியவைகளை யுட்கொள்ளுகிறார்கள். உற்றார், உறவினர் முதலியோர்கள் இதை யெடுத்துரைக்கின் அவர்கள் உட்கொள்ளார் என்பது திண்ணம்.

நோய் ஒன்றல்ல. பல. ஒவ்வொரு நோய்க்கும் ஒவ்வொரு விதமான காரணமுண்டு. வைத்திய நிபுணர்கள் அநேக வருஷங்களாக பரிசிலனை செய்து பல நோய்களுக்கு மூல காரணங்கள் கண்டு பிடித்திருக்கின்றனர். இன்னும் அவர்களுடைய பேரறிவுக்குப்புலப்படாத அநேக வியாதிகளுமிருக்கின்றன. கணக்கில்லாத அநேக உயிர்களைக்கொன்று வருகிற 'பிளேக்' நோய்க்கு மூலகாரணமின்னதென்று கண்டிருந்தும் பிரஜைகள் ஏராளமாய் இறந்து அக்கொடிய நோய்க்கு இரையாகின்றார்கள். இதற்கு மூலகாரணம் இன்னும் செவ்வையாய் விளங்கவில்லையென்றே சொல்ல இடங்கொடுக்கிறது. இன்னும் இதை விவரிக்கப்புகின் வளருமென்றும் அஞ்சி விடுத்தேன்.

இவைகளில் சிலமுக்கியமான விஷயங்களை மாத்திரம் இதனடியிற் சொல்லுகிறேன். அந்தவிதிகளைக் கூடுமானவரையில் அனுசரித்து நடப்போமானால் சரீரசுகத்தையிழக்காமலும் புத்திரப்பேறு குறைவின்றியும் இவ்வுலகத்தில் வசிக்கலாம். தேகசௌக்கியத்தைக் காப்பாற்றுவதற்காக பதினொரு விஷயங்களை நாம் கவனிக்கவேண்டும். அவையாவன:—(1) நிலம், (2) காற்று, (3) தண்ணீர், (4) ஆகாரம், (5) ஸ்[illegible]ம், (6) வஸ்திரம், (7) தேகப்பயிற்சி, (8) [illegible]திரை, (9) மனம், (10) இருப்பிடம், (11) [illegible]த்துவியாதிகள். இவைகளில் ஒவ்வொன்[illegible]யொவ்வொரு சஞ்சிகையில் விவரிப்போம்.

பு. து. இரத்தினப்பிள்ளை.

❋ ❋ ❋

## SANKARA PRYAN.

## சங்கரப்பிரியன்.

### XIV. பரஸ்பர அன்பு.

மறுநாட்காலையில் சங்கரப்பிரியனும் எழுந்து பாதக்குறட்டிமேலேறி கங்கைக் கரைக்குப் போகவேண்டுமென்று எண்ணாமல் மத்திய மாகாணத்தின் ராஜகுமாரத்தியின் அரண்மனையின் நான்காவது உப்பரிகையில் போய்ச்சேரவேண்டுமென நினைத்தமாத்திரத்தில் அவ்விடம்போய்ச் சேர்ந்தான். சேர்ந்ததும், ராஜகுமாரத்தி சேடிகள் முதலானவர்களில்லாமல் தனிமையாயிருக்கக்கண்டு அவளெதிரில் போய் நிற்க அவளும் திகைத்து "நீயார் அனேகம்கட்டுக்காவலையுடைய இந்த அரண்மனையின் உப்பரிகையில் எப்படி வந்தாய்?" என்று வினவ, அரசகுமாரன் "பெண்ணே; யான் நீர்வள நிலவளங்களுள் செழிப்புற்ற தஞ்சைமாநகரின் அரசனாகிய நீதிமானது முதற்புதல்வன். காளியினது அருளால் ககனமார்க்கமாய் நினைத்தவிடம் செல்ல அருள் பெற்றவன். எவ்வித கட்டுக்காவலும் எனக்கு லக்ஷியமில்லை. நேற்றைய தினம் காலையில் உன்னைக்கண்டு என் மனமுழுவதும் உன்னிடத்தில் வைத்துவிட்டேன். நீ என்னைக் கலியாணம் செய்துகொண்டாலல்லது நான் ஜீவித்திருக்கமாட்டேன்" என, மனோரஞ்சினியும் அவ்விராஜகுமாரனிடம் பற்றின மனத்தினளாய், அவனைப்பார்த்து, நீ என்னைக் கலியாணம் செய்துகொள்ள நினைப்பது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போலாகும். ஏனெனின் எனது பிதா என்னைத் தனது சத்துரு அக்கிரமபுரத்தரசன் மகன் துஷ்டபுத்திக்கு கலியாணம் செய்து கொடுக்கவேண்டியவராயிருக்கிறார். அப்படிச் செய்யாவிடில், நாளைய தினமே, இவ்விராச்சியம் படையெடுக்கப்பட்டு, எனது தாய் தந்தையர்கள் நகரத்தைவிட்டுத் துரத்திவிடப்படுவார்கள்! என, சங்கரப்பிரியன் "நீ பயப்படவேண்டாம்: நீ இப்பொழுது என்னோடுகூட வந்துவிடு! நமது விவாக முடிந்ததும், எனது தகப்பனார் கட்டாயமாய் ஒரு பெருத்த சைனியத்தோடு வந்து, அக்கிரமபுரிஅரசனை, உனது தந்தையாருக்குக் கப்பம் கட்டும்படி செய்துவிடுப்போவார்" என, அவளும் அதற்கிசைந்து, ஒருபாதக்குறட்டை சங்கரப்பிரியனும் மற்றதை மனோரஞ்சினியுமாகக் காலில்மாட்டிக்கொண்டு கையைச்சேர்த்துக்கொண்டு தஞ்சைமாநகருக்குப் போகவேண்டுமென்று நினைக்க, அப்பாதக்குறடானது இருவரையும் ககனமார்க்கமாய்த் தூக்கிச்செல்ல, கொஞ்சதூரம் சென்றதும், அம்பிகையினால், பரத்துக்குச் சாதகமாய்க் கொடுக்கப்படாததலால், உபயோகம் மாறுபட்டதினிமித்தம், இனத்துக்குவேண்டிய அளவுமாத்திரம் உதவிசெய்ய, அவ்விருவரையும் பூமியில்

ஒரு நிமிஷமேனும் கஷ்டமென்பதையே அறிந்திராத நமது மனோரஞ்சினியும் தாபத்தையும், பசியையும் சகிக்கலாற்றாதவளாய் மூர்ச்சைபோயினாள். சங்கரப்பிரியனும் அவளைத் தூக்கிக் கொண்டுபோய் அருகிலுள்ள ஒரு மரத்து நிழலில், புல்லடர்ந்து பச்சைக் கம்பளி விரித்தாற்போலிருந்த ஒரு இடத்தில் உட்காரவைத்து சைத்தியோபசாரஞ் செய்ய மூர்ச்சை தெளிந்தெழுந்தாள். பிறகு அவ்விருவருக்குள் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

மனோரஞ்சினி:—நாத, பசியும், தாபமும் என்னால் சகிக்க முடியவில்லை. ஒரு அடிகூட எடுத்துவைக்க என்னால் முடியாது. தாங்கள் அருகில் ஏதாவது கிராமமிருந்தால், தேடிப்போய், கொஞ்சம் ஆகாரம் தேடிவாருங்கள்? அதைப் புசித்துப் பசியாறின பின்னர் என்னசெய்யலா மென்பதையும் இன்னவிடம் போகலாம் என்பதையும்பற்றி யோசிக்கலாம்.

சங்கரப்பிரியன் :—கண்மணி! யான் என்ன செய்வேன்! இப்படி ஆகுமென்று நான்கொஞ்சம்கூட நினைக்கவில்லை. 'தேகத்தை இச்சித்தையேயாகில் பரத்தைமுற்றிலும் இழப்பாய்' என்ற அம்பிகையின்வார்த்தையை முற்றிலும் மறந்தேன். பாதக்குறடுநடுவழியில்விட்டுமறைந்துபோகுமென்று நினைத்தேனல்லன். இது யான் அறியாமற்செய்தபிழை: மன்னிப்பாயாக. உன்னுடன்கூடவிருப்பதனால்எவ்வித கஷ்டத்தையும் லக்ஷியம்செய்யேன். உனது அரவிந்தமுகத்தினின்றும் முத்துமுத்தாய் வேர்வைவடிவதையும், பசியாய் உனதுசக்ரம்சோர்ந்து காண்வதையும் பார்க்கப்பார்க்க என் மனம் பதைக்கிறது. என்ன செய்வேன்! அனேகம் சேடிகள் வேலைக்காரர் ஊழியம் செய்ய எவ்வளவோ சுகமாயிருந்த உன்னை இவ்வளவு கஷ்டத்திக்கு ஆளாக்கின பாவியாகிய யான், உனக்குப் பசியாற ஆகாரம் ஏதேனும் தேடிக்கொண்டு வரும் உபாயமும் அறிந்தேனல்லன். உன்னை நிர்மானுஷ்யமான இவ்விடத்தில் விட்டு எப்படிச் செல்வேன்! இங்கேயேயிருந்து நீ பசியினாலும், சோர்வினாலும் கஷ்டப்படுவதைப் பார்த்து எப்படிச் சகிப்பேன்! என்று சொல்லி கண்ணீர் விட்டுக் கதறி அழ,

மனோரஞ்சினி:—நாதா! அழவேண்டாம். கஷ்டகாலம் யாரைவிட்டது! அரிச்சந்திரனும், சந்திரமதியும் எவ்வளவு கஷ்டங்களை அனுபவித்து முடிவிற் சுகம்பெறவில்லை. நளனும், தமயந்தியும் எவ்வளவு கஷ்டப்பட்டு இறுதியிற்சுகமடையவில்லை! ராமரும், சீதையும் ராச்சியத்தை விட்டு வனவாசம் செய்து எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்து, முடிவில் சுகம்பெறவில்லையா? துரௌபதி, கஷ்டகாலத்தின் கூறால் கொஞ்சகாலம் ஊழியக்காரியாயிருக்க நேரவில்லையா? நாமும் கொஞ்சகாலம் கஷ்டப்பட்டு, இறுதியில் சுகமடையலாம். தாங்கள் என்னைப்பற்றி விசாரப்பட்டு இவ்விடமிருப்பதில்என்னபிரயோசனம்'நான் இவ்விடமிருக்கிறேன். இதோ எனதுபுலாக்கு எடுத்துக்கொள்ளும். இதிற்பதித்திருக்கும் கல் மிக்கவிலையுள்ளது. இதைஎங்கேயாகிலும் விற்று பணமாக்கினால், நாம் சொற்பகாலம் ஏதாவதொரு ஊரில் ஒரு வீட்டை வாடகைக்கமர்த்தி கொஞ்சநாளிருக்கலாம். அங்கிருந்தபடி நமது தாய்தந்தையர்களுக்கு சமாசாரம் அனுப்பலாம் என, சங்கரப்பிரியனும் புலாக்கை வாங்கிக்கொண்டு தனது மனதை முற்றிலும் மனோரஞ்சினிக்குத் துணையாக வைத்துவிட்டு, பித்தம்பிடித்தவன் போல, திசையை நோக்கிச் சென்றான்.

---

### XV. நவாப் தர்பார்.

இந்திராபாத்தில் காரேமீரோ பாஷா என்பவர் அரசாண்டு கொண்டிருக்கிறார். அவர் மஹா புத்திசாலி. அவரது சாமர்த்தியம் பின்வரும் சம்பாஷணையால் நன்குவிளங்கும்.

பாக்ஷா:—கணக்குபுள்ளே! இந்தவருஷம், நிம்பிளகி நெல்லுக்காச்சி மரம் எத்தனை யிருக்கான் ?

கணக்குப்புள்ளே:—நபாப், இந்த வருஷம் நூறு லக்ஷத்துக்குப் பத்துமூவாயிரத்து அறுநூற்று அம்பதரையே அரைக்கால்.

பாக்ஷா :—கண்புள்ளே ரொம்ப கெட்டி. இன்னொண்ணுச் சொல்லு பாக்கலாம்.

கணக்குபுள்ளே :—அப்படியே நபாப்.

பாக்ஷா :—நிம்பிளகி ராச்சியத்தில் புளி மரம் தேங்காமரம் எவ்வளவு காச்சித்தொங் கறான் ?

கணக்குப்புள்ளே:—முதல் சரியாய் $5\frac{1}{2}$ லக்ஷம், இரண்டாவது அரைக்கால் குறைய சரியாய்—

பாக்ஷா:—பேஷ், பேஷ், ரொம்பகெட்டி ! நம்மகண்புள்ளெ ரொம்பகெட்டி ! கணக்கு கேட்ட உடனேச் சொல்லறான். உனக்கி என்னவேணும் கண்புள்ளே ?

கணக்குப் புள்ளே :—நவாப், ரொம்ப நாளாய் எனக்கு சம்பளம் ஒசத்திக்கொடுக்க வேயில்லே: புளியங்காயி தேங்காயி கணக்கு ப்போடுவது எவ்வளவோ கஷ்டம் என்பது தங்களுக்குத் தெரியாததல்ல. கணக்குப்போ ட்டுக்கூட்டிக் கூட்டி என் மூளேயே போய்வி ட்டது. அரைவயிற்றுக்குக்கூட கொடுக்கும் 100—ரூபாய் சம்பளம் போறுகிறதில்லே. மா சம் 200 ரூபாய் சம்பளம் கொடுக்க உத்திர வாகவேணும்.

பாக்ஷா:—மந்திரி! நம்ம கண்ப்புள்ளே கெட்டிக்கு மாசம் ரூ 200ச்சம்பளம் பெரி ச்சுன்னு நினேக்கிறாய் மந்திரி?

மந்திரி :—ஒருநாளுமில்லே நவாப்.

பாக்ஷா :—அப்படியானல் இந்த மாசம் முதல் நம்ம கண்புள்ளேக்கி நம்ம கஜாஞ்சிக் கிச் சொல்லி ரூ 200 கொடுக்கச்சொல்லு! கண்புள்ளே நீபோகலாம்! மந்திரி ! உன்னெ நம்ம கூடாரத்திலேருந்து கைப்பொட்டிகொ ண்டுவரச் சொன்னேனே, எங்கேஅது?

மந்திரி:—நவாப் கூலி ஆள் அகப்படவில்லே. வழியிலே எவனே வந்துகொண்டிருந்தான். அவன் தலேமேலே வைத்து முன்னடி அனு ப்பினேன். ஆனல் பொட்டிச்சாவியை நான் வைத்துக்கொண்டேன் : ஏனென்றல் ஒருக் கால் அவன் அயோக்கியனயிருந்து பொட்டி யை எடுத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டால் என்ன செய்கிறதென்று.

பாக்ஷா:—சாவி என்னத்துக்கு மந்திரி.

மந்திரி :—தெரியவில்லேயா நபாப்! பொட் டியிலிருந்து நகை கிகை பணம் கிணம் எடுக்க வேண்டுமென்றல் நம்மகிட்ட அப்பயல் சா விக்கிவருவானன்றே ! அப்பொழுது புடித்து கிண்டு எண்டா பொட்டி கொண்டுவரவில்லே என்று நொறுக்கிப்பிடலாம் என்று வை த்துக்கொண்டேன்.

பாக்ஷா:—மந்தரி உன்கெட்டியே கெட்டி! நீ மந்திரியிருக்கிறன், ராச்சியம் அச்சாயிரு க்கான்.

மந்திரி :—இன்னொண்ணு நவாப் ! போன மாசம் 1000-வண்டி நெல்லு அரண்மனேக்கு அனுப்பினேன். படவாப்பசங்கள் வண்டிக்கா ரன்கள் வண்டியோடுஓடிப்போய்விட்டார்கள். ஆனல் அவர்கள் குடுமிகளே என் கையிலே வைத்துக்கொண்டிருக்கிறேன்.

பாக்ஷா :—எப்படி மந்திரி ?

மந்திரி :—அவர்களுக்கு கூலிகொடுக்கணு மன்றே அதை முன்னடி கொடுக்கமாட்டே னென்று கையிலேவைத்துக்கொண்டேன். நா ளேக்கு கூலிவாங்கவந்த உடனே, வண்டிநெல் லெங்கேடா என்று பிடித்துக்கொண்டு நொ றுக்கிப்போடுகிறேன்.

பாக்ஷா :—பேஷ் பேஷ் ! மந்திரி, வீதியில் என்ன அந்தக்கூடையில்கொண்டுபோறது

மந்திரி :—கத்திரிக்காய் நபாப்!

விட்டு மறைந்துவிட்டது. பகல் பத்துமணி ஆயிற்று. ஆகாயத்தில் மேகமென்பதே கிடையாது. சூரியனும் பசியினால் களைத்துப்போன தம்பதிகளின் பேரில் கொஞ்சமேனு மிரக்கமில்லாமல் தனதுகிரணங்களைப் பிரயோகிக்க,

பாக்ஷா:—அதுக்கு என்ன பண்ணலாம் மந்திரி.

மந்திரி:—சமயல்செய்து சாப்பிடலாம் நபாப்!

பாக்ஷா:—ஆனால் அதுக்குவாங்கு மந்திரி.

மந்திரி:—அப்படியே நவாப் (10, 15 காய் வாங்கிக்கொண்டு வருகிறான்.)

பாக்ஷா:—என்ன அளகானகாய். கத்திரிக்காக்குச் சமானம் காய் உண்டு மந்திரி?

மந்திரி:—இல்லை நவாப்; இதைப்பத்தித்தான் அல்லா அதுக்குக் குல்லாபோட்டிருக்கிறார்.

பாக்ஷா:—இதை சீக்கிரம் சமையல் பண்ணிக்கொண்டா!

மந்திரி:—அப்புடியே நவாப். (போய்சமையல்செய்துகொண்டுவர, நவாப் ஓரளவு வாயில்போட்டதும், அதிலிருந்த ஒரு சிறிய முள் நாக்கில் தைத்துவிட்டது.)

பாக்ஷா:—மந்திரி! கத்திரிக்கா ரொம்ப கெட்டது. கெட்டகாய்.

மந்திரி:—ஆமாம்நவாப், ரொம்பகெட்டது! அதுக்காத்தான் அல்லா அதின் தலையிலே ஆணி அடித்துவிட்டது.

பாக்ஷா:—நீம்பளிக்கி இன்னிக்கி இன்னம் எதாவது வேலையிருக்கான்.

மந்திரி:—ஆமாம் நவாப்! நம்ம சேனை தலைவன் பைரம்கான் இருக்கிறானல்லவா, அவனுக்கு ஒருமாதத்துக்கு ஊருக்குப்போய்வர ராஜா வேண்டுமாம்.

பாக்ஷா:—அப்படியே போகட்டும்.

---

## XVI. மனோரஞ்சினியின் ஆபத்து.

சென்ற அதிகாரத்திற்கு முந்திய அதிகாரத்தில் சொன்னபடி நமது சங்கரப்பிரியனும் கையில் புலாக்குடன் கொஞ்சதூரம் சென்று ஓர் கிராமத்தை அடைந்தான். அவ்விடம் பல கைகளிலும் அந்நகையைவிற்க முயன்றும் பயன்படாதவனாய் அவ்வூரில் மிக்க தனவானாயும் துஷ்டனாயுமுள்ள தனகோடி கோலாகல செட்டியென்னும் கல் வியாபாரியிடம் வந்து சேர்ந்தான். அவனும் நகையை வாங்கிப்பார்த்து "ஆஹா! எவ்வளவு நேர்த்தியான கல்! என்ன நீரோட்டம்! இந்நகை சாதாரணமான ஸ்திரீகள் தரிக்கத்தக்கதன்று: எந்த தனவானது மகள் தரித்ததோ இது! இப்பைத்தியமாய இவனிடமிருந்து சங்கதிகளை அறியவேண்டும் என்று ஆலோசனைசெய்து பின் வருமாறு கேட்கலானான். "இந்நகை யாருடையது? உன்னிடம் எப்படிவந்தது? எங்கு திருடினாய்? உண்மையைச்சொல்! இல்லாவிடில் போலீசுக்கு ஆள் அனுப்பிவிடுவேன். நீ சிறைச்சாலைக்குப்போவது நிச்சயம்" என்று மெரட்ட, ராஜகுமாரன் "இது என்னை கல்லியாணம் செய்துகொள்ள சம்பதித்து என்னுடன் கூடவந்த அரசகுமாரத்தியினது: உமக்கு இதை வாங்கிக்கொள்ள இஷ்டமிருக்குமபட்சத்தில் அதற்கு என்னவிலை மதிக்கிறீரோ அப்பணத்தைஇப்படித்தாரும்" இல்லாவிடில் நகையை திருப்பிக்கொடும்: நான் வேறு எங்கேயாவது அதை விற்றுக்கொள்ளுகிறேன்" என்று சொல்ல, அச்செட்டியும் நகைத்து "நீ ஒருபெரிய திருடன்: இதை எங்கேயோ திருடியிருக்கிறாய்! கொஞ்ச நாளைக்கு முன் இதுபோன்ற நகை ஒன்று என்னிடமிருந்து திருட்டுப்போயிற்று. உன்னோடுஓர் ராஜகுமாரத்தி வந்ததாக நீ சொல்வது சுத்தப்பொய். உன் போன்ற பைத்தியக்காரனை கலியாணம் செய்துகொள்ள எந்த ராஜகுமாரத்தி சம்மதிப்பாள்! உன்னை இப்பொழுதே போலீஸ்காரர் வசம் ஒப்பிவித்துவிடுவேன்: ஆனால் எனது நகை என்னிடம் வந்துவிட்டதால் உன்னை எதற்கு தொந்திரவு செய்யவேண்டுமென்று

நினைக்கிறேன். ஆகையால் நீபோகலாம்" என, அதற்கு சங்கரப்பிரியன் "நானசொல்வதெல்லாம் வாஸ்தவம்தான். நான் சொன்ன ராஜகுமாரத்தி ஒருமைல்தூரத்திலுள்ள ஆலமரத்தடியில் வெயிலினாலும் பசியினாலும் களைத்துப்போய் நடக்க சக்தியற்றிருக்கிறாள். ஆகையால் சீக்கிரம் நகையின் விலையையாவது தாரும்: அல்லது நகையையாவது திருப்பிக்கொடும்! இல்லாவிடில் இவ்வூர் நியாயாதிபதியிடம்போய் பிரியாது செய்து உம்மை சிட்சைக்குக்கொண்டுவருவேன்" என, செட்டியும் அதைக்கேட்டு நகைத்து உன் போன்ற பயித்தியக்காரன் ஒரு விலையுயர்ந்தநகையை என்னிடம் விற்கக் கொணர்ந்தானென்றால் அதை ஒருவரும் நம்பமாட்டார்கள். தவிர அரசகுமாரத்தியைப்பற்றிய உன்கதை ஜனங்களுக்கு சொல்லப்படின் உனக்கு எலுமிச்சம்பழச் சாறுதேய்த்து பைத்தியக்காரர்கள் அடைக்கப்படும் கொட்டடியில் வசிக்கும்படியான பாக்கியத்தைப் பெறுவாயென்பதில் யாதொரு ஆட்சேபணையுமில்லையென்று சொல்லி, அர்த்தசந்திரப்பிரயோகம்பண்ணி, அதாவது சாதாரணத் தமிழில் (கழுத்தில் கல்தா கொடுத்து) வெளியேதள்ளி கதவை தாளிட்டுக்கொண்டான். பிறகு உள்ளேபோய் தனக்கு அந்தரங்கமான நான்கு பல்லக்கு போகிகளையும் வரவழைத்துப் பின்வருமாறு சொல்லலானான். "போகிகளே நீங்கள் எத்தனையோ தடவைகளில் எனது கட்டளைகளை நிறைவேற்றி வெகுமானம் பெற்றிருக்கிறீர்கள். இப்பொழுது ஓர் சிறிய காரியம் உங்களால் ஆகவேண்டியிருக்கிறது. அதைச் செய்து முடிப்பீர்களாகில் உங்களுக்கு 1000 ரூபாய் வெகுமதி தருகிறேன்" என, அதற்கு அப்போகிகள் "தங்கள் சித்தம் எங்கள் பாக்கியம். தாங்கள் காலாலிட்டவேலையைத் தலையாற்செய்துமுடிக்கத் தயாராயிருக்கிறோம்" என்றனர்.

செட்டி:—நீங்கள் இக்கணமே எனது தந்தப்பல்லக்கை எடுத்துக்கொண்டுபோவீர்கள். ஊருக்கு ஒருமைல்தூரத்திலுள்ள ஆலமரத்தடியில் ஒரு பெண்பிள்ளை இருக்கக்காண்பீர்கள். அவளை வழக்கம்போல இவ்விடம் கொண்டுவந்து சேர்க்கவேண்டும் என்றான்.

அவர்களும் அப்படியே ஆகட்டுமென்று உத்தரவு பெற்றுச் சென்று பசிதாகத்தால் மூர்ச்சைபோய் பிரக்ஞைதப்பியிருந்த நமது மனோரஞ்சினியை தந்தப்பல்லக்கில் மெதுவாக தூக்கிவைத்து செட்டியினது அந்தரங்க அறையில் கொண்டுவந்து சேர்த்தார்கள். அடுத்த அதிகாரத்தில் அவ்வறையைப்பற்றி வர்ணிப்போம்.

---

## "எம்மதமும் சம்மதமே"

"*The Unityot Religion and the Variety of Creeds* is the title of an excellent little brochure, comprising an essay on the subject read by Mr. C. V. Swaminatha Iyer, the well-known Editor of the *Viveka Chintamani*, at the Ranade Hall, Mylapore, last April. Mr. Swaminatha Iyer is widely known for his religious piety and Vedantic culture, and in the present instance, he, with admirable spirit, sets forth the Vedantic ideal of life in the light of modern principles of Science, defining the Laws of Life-governing Thought. The Essayist brings to his task all earnest and genuine study of comparative Religion, and in our opinion, he is rendering a real service to the complex religious Life of India by endeavouring to rise above disputes upon secondary matters, and focussing attention on those elements of absolute Truth which are of permanent validity and of universal application. Various quotations from the Bible and the writings of Western savants, Emerson and Masterlinck, and of Indian "Saints" like Thiruvalluvar, Thaimanavar, have been set forth to point to the realisation of the Unity of religion, though the name of Creeds in the World may be legion, "each having a significance of its own and a relation to the whole." The average Indian Reader will feel at home in the Author's line of Vedantic thought, while, we are sure, he attempt at reconciling Vedanta with the Western conception of Thought-Energy will afford mental food for him. And the Vedantic ideal Life which is most maligned though least understood by some of its Western critics, will, we are sure, attract to itself their thoguhtful attention by the Author's spirited exposition of it. In short, the publication should be in the hands of every one who is disposed to inquire into the real Spirit of Universal Religion, although one cannot always travel with the author in his mystic wanderings in the regions of Yoga practice".— *The Unitted India.*